
கபுட்டு
காக்
காக்
காக்!
இலங்கையின்
உன்னத
போராட்டம்
சிறுவர்
செயற்பாட்டாளர்களுக்கு
ஒரு வழிகாட்டி
அமால் டி சிகேரா + தேஷான் தென்னகோன்
பிரதி எடுக்கவும் பகிரவும் இலவசம்



## தலைப்பு பற்றி

2022ம் ஆண்டு இலங்கை போராட்டக்களங்களில் ஒலிக்கும் மிகவும் பிரபல்யம் பெற்றதொரு முழக்கமாக "கப்புட்டு காக் காக் காக்" விளங்குகின்றது. "கப்புட்டா" அல்லது "காகம்" என்பது இலங்கையைச் சேர்ந்த மிகப் பிரபல்யமான ஊழல்வாதியான ஒரு அரசியல்வாதிக்கு சூட்டப்பட்ட புனைப்பெயராகும். "காக் காக் காக்" என்பது காகம் எழுப்பும் சத்தமாகும். நீங்கள் இந்த முழக்கத்தைக் கேட்கும் போது, அதிகாரத்தில் இருந்து இலங்கை நாட்டுக்கு தீங்கு செய்த ஒருவருக்கு எதிராக யாரோ ஒருவர் போராட்டம் செய்கின்றார் என்பதனை அறிந்து கொள்வீர்கள். இந்த முழக்கமானது எமது இலங்கை மக்களின் போராட்டத்தினை வெளிப்படுத்தும் ஓர் அடையாளமாகவும் உள்ளது.

## காலத்திட்ட அமைப்பு பற்றி

எனது ஆங்கிலப் பதிப்பு நூல் ஏப்ரல் 18 முதல் 6 ஜூன் 2022 வரையிலான காலப்பகுதியில் எழுதப்பட்டு இணையத்தில் வெளியிடப்பட்டது. அந்த ஏழு வாரங்களும் அதற்கு முன்னரான காலப்பகுதியிலும் இடம்பெற்ற பல்வேறு விடயங்கள் தொடர்பில் நான் உங்களுக்கு கூறுவேன். எனது சிங்கள மற்றும் தமிழ் பதிப்புகளை வெளியிடுவதற்கான ஏற்பாடுகளை மேற்கொண்டிருந்த ஜூன் மற்றும் ஆகஸ்ட் 2022, மாதங்களில் பல்வேறு சம்பவங்கள் நடைபெற்றன. எதிர்காலத்தில் நடக்கப்போகும் விடயங்கள் பற்றி எவராலும் எதிர்வுகூற முடியாதல்லவா? ஆகவே, இங்கு நான் பேசிய விடயங்கள் அனைத்தும் ஜூன் 2022 இற்கு முன்பு இடம்பெற்ற சம்பவங்களின் அடிப்படையிலானதாகும். ஆனால் அந்த சம்பவங்களினூடாக பெறப்பட்ட உணர்வுகள் நீண்ட காலம் வரை நிலைத்திருக்கும்.



எமக்கு முன்னோடிகளாக இருந்து போராடிய அனைவருக்காகவும்
எமக்கு அடுத்தபடியாக போராடவுள்ள அனைவருக்காகவும்

எழுதியவர் அமால் டி சிகேரா

படங்கள் மற்றும் வடிவமைப்பு தேஷான் தென்னகோன்

தொகுப்பு ருவந்தி டி சிகேரா

மதிப்பாய்வு: அம்பிகா சற்குணநாதன், ஹெலனி கல்பய, பியூமி சமரவீர, சகுந்தலா கதிர்காமர், ஷமாரா வெத்திமுனி, ஷெஹான் கருணாதிலக்க மற்றும் டிரேசி ஹொல்சிங்கர்

பிரசுரிப்பாளாகள் அமால் டி சிகேரா மற்றும் தேஷான் தென்னகோன்

இந்த புத்தகத்தின் ஆங்கில பதிப்புகள் மூனியாக் மற்றும் சோல் மாதாஸ் ஆகியோரால் வடிவமைக்கப்பட்ட யாழ்தேவி(2015) எழுத்துருவிலும், தமிழ் பதிப்புகள் ஹரன் கிரா.ஃப்பால் வடிவமைக்கப்பட்ட பாமினி ப்ளேன் (1993) எழுத்துரு, மோனோடைப்பின் பாஸ்கர்வில் எழுத்துரு, மற்றும் மூனியாக்கின் யாழ்தேவியிலும் வடிவமைக்கப்பட்டுள்ளது. சிங்கள பதிப்புகள் டிரோ டைப்வொர்க்ஸ் வடிவமைத்த மைக்ரோசாப்டின் நிர்மலா UI (2012) மற்றும் மூனியாக்கின் யாழ்தேவி ஆகியவற்றிலும் அமைக்கப்பட்டுள்ளது.

இணையத்தில் நூல் பற்றிய தொகுப்புரைகளை வழங்கிய இணைய காப்பகம், ஸ்டேஜஸ் தியேட்டர் குரூப் மற்றும் மைன்ட் அட்வென்ட்ச்சர்ஸ் தியேட்டர் ஆகியோருக்கு எமது நன்றிகள்.

ISBN 978-1-7395849-1-7





முதல் பதிப்பு ஆகஸ்ட் 2022

எனது கடதாசியின் அளவு ஏ5 ஆக உள்ளது. நீங்கள் என்னை இரண்டாக ஏ4 பக்கங்களில் பிரதி எடுக்கலாம் அல்லது அச்சுப்பதிப்பு செய்து கொள்ளலாம். என்னை பிரதி எடுத்து இலவசமாக அனைவருக்கும் பகிருங்கள்.



# உள்ளடக்கம்

# கதாப்பாத்திரங்கள்

இந்த கதாப்பாத்திரங்கள் பேராசைப் பிடித்தவை, அதிகாரம் வாய்ந்தவை. மற்றவர்களை வேதனைப்படுத்தும் தன்மை கொண்டவை. அதிகாரம் உள்ள அரசியல்வாதிகளாகவும், நேர்மையற்ற மத தலைவர்களாகவும், வன்முறை கும்பலாகவும், இராணுவத்தினராகவும் அல்லது பொலிஸ் நபராகவும், சுயநலம் கொண்ட செல்வந்த வர்த்தகர்களாகவும் அல்லது ஒரு பெரிய நிறுவனமாகவும் இந்த கதாப்பாத்திரங்கள் இருக்க முடியும். இந்த நிலைமை பக்கங்களுக்கு பக்கம் மாறக்கூடும், ஆனால் நீங்கள் இந்த கதாப்பாத்திரங்களை அடையாளம் காண கற்றுக்கொள்வீர்களாயின் நீங்கள் அவர்களை எல்லா இடங்களிலும் கண்டுபிடிக்க ஆரம்பித்து விடுவீர்கள்.





இது ஒரு தும்புத்தடி. ஆனால் இது ஒரு போதும் நிலத்தைக் கூட்டாது. அது எப்பொழுதும் வேறு ஒன்றாக இருக்கும்.

இது ஒரு தங்கம்: இதுவும் வேறு ஒரு பொருளாக உள்ளதுடன் மக்கள் இதன் மீது பேராசை கொண்டுள்ளனர்.



இந்த கதாப்பாத்திரங்கள் நீங்களாகவும் நானாகவும் மற்ற அனைவராகவும் இருக்க முடியும்.



# வணக்கம்!

நீங்கள் என்னை தெரிவு செய்தமைக்கு மிகவும் மகிழ்ச்சி அடைகின்றேன்.

ஒரு புத்தகமாக இருப்பதில் மிகவும் சிறப்பான விடயங்கள் பல உள்ளன. ஆனால் என்னால் சுயமாக இயங்க முடியாது. நீங்கள் தான் என்னை கண்டுபிடித்து என்னை விருப்பமுடன் திறந்து பார்க்க வேண்டும்.

வாருங்கள். இப்பொழுது நாங்கள் நண்பர்களாகுவோம்!

ஆகவே...

எமது நாடான இலங்கையில் தற்போது என்ன நடைபெறுகின்றது என்பது பற்றி பேசுவோம்.

சில வேளைகளில் உங்களுக்கு நினைவிருக்கலாம். மாலை வேளைகளில் அல்லது விடுமுறை நாட்களில், உங்களது குடும்பத்தில் உள்ளவர்கள் ஒவ்வொருவரையும் பார்த்து பின்வருமாறு கேட்டிருப்பார்கள் “நாம் என்ன செய்யலாம்? பூங்காவுக்கு செல்வோமா? கடற்கரைக்கு செல்வோமா? உறவினர்கள் வீடுகளுக்கு செல்வோமா?”

இப்பொழுது 2022ல், பல குடும்பங்கள் கேட்கின்றன – “போராட்டத்திற்கு போவோமா?”

நீங்கள் அப்பொழுது சுவரொட்டி ஒன்றை வரைந்துகொண்டு அருகில் நடைபெறும் போராட்டத்திற்கு சென்றிருப்பீர்கள். அங்கு ஒரு மெழுகுதிரியை ஏற்றி வைத்துக் கொண்டு அல்லது சுவரொட்டியைப் பிடித்துக்கொண்டு வானை நோக்கி உங்கள் கைகளின் முஷ்டியை உயர்த்திக் கொண்டு இருந்திருப்பீர்கள். நீங்கள் கோஷமிட்டுக் கொண்டும் சத்தமிட்டுக் கொண்டும் இருந்திருப்பீர்கள். உங்களைக் கடந்து சென்றவர்கள் உங்களை உற்சாகப்படுத்தி வாகன ஒலியை எழுப்பியிருப்பார்கள்.

வளர்ந்தவர்கள் சிலர் சிறுவர்கள் போராட்டத்தில் ஈடுபடக் கூடாது என்று கூறுகின்றனர். மற்றும் சிலர் அவ்வாறில்லை என்கின்றனர். உங்களது நண்பர்கள் சிலர் தினந்தோறும் போராட்டத்தில் கலந்துகொள்ள சென்றிருக்கக் கூடும். ஒரு சிலரோ ஒரு நாள் கூட சென்றிருக்க மாட்டார்கள்.

எவ்வாறாயினும், இப்பொழுது அனைவரும் மக்களின் போராட்டம் பற்றியே பேசுகின்றனர்.

இலங்கை நாட்டின் இளம் பிரஜையாக உங்களுக்கும் அதில் பங்குபற்றும் அவசியம் இருக்கும். ஆனால் ஞாபகம் வைத்திருங்கள், மாற்றங்களை ஏற்படுத்த ஒருவரின் உடல் அளவு என்பது முக்கியமானதல்ல அல்ல. (எனது அளவைப் பார்த்தீர்கள் தானே!)

“என்ன நடைபெறுகின்றது? ஏன் நாங்கள் போராடுகின்றோம்? எது மாற வேண்டும்?” என்றும் உங்களுக்குள்ளும் பல கேள்விகள் இருக்கக் கூடும்.

உங்களின் சில கேள்விகளுக்கு பதில்களை அளிக்க முயற்சித்து புதிதாக நீங்கள் சிந்திப்பதற்கு உதவி செய்ய முயற்சிக்கின்றேன். கேள்விகள் கேட்பது மிகவும் சிறந்தது. அவை எமக்கு கற்றுக்கொள்ள உதவியாக உள்ளன. ஏன் நாங்கள் இவ்வாறு செய்கின்றோம் என்றும் அவ்வாறு செய்வதற்குள்ள சிறந்த வழிமுறைகள் பற்றியும் சிந்தித்துப் பாருங்கள்.

ஒரு முறை என்னை வாசித்த பின் மற்றுமொரு பிள்ளையிடம் என்னைக் கொடுத்து விடுங்கள். அப்பொழுது தான் பல நண்பர்களை என்னால் ஏற்படுத்திக் கொள்ள முடியும்!

ஆனால், முதலில் நாங்கள் யார் என்பதையும் எப்படி இங்கு வந்தோம் என்பது பற்றியும் முதலில் விளங்கிக் கொள்ள முயற்சிப்போம்...


மனம்,
கண்கள்,
செவிகள்
நாம் யார்,
நாம் எப்படி
இங்கு
வந்தோம்?

# எது நாட்டை உருவாக்குகின்றது?

இலங்கை ஒரு நாடு.

ஆனால், எது ஒரு நாட்டை நாடாக மாற்றுகின்றது? எது இலங்கையை எங்களுடைய நாடாக்குகின்றது?

எமது நாடு ஒரு தீவு. அது கடலால் சூழப்பட்டுள்ளது.

மிக நீண்ட காலத்திற்கு முன்பிருந்தே பலதரப்பட்ட மக்கள் அண்மைய நாடுகளிலிருந்தும் தூர தேசங்களிலிருந்தும் வருகை தந்து எமது நாட்டை வசிப்பிடமாக்கிக் கொண்டனர். பல்வேறுபட்ட இராச்சியங்கள் இங்கு உருவாகின. அவை அயலில் இருந்தாலும், சில நேரங்களில் சண்டையிட்டுக் கொண்டன. பின்னர் 1505ம் ஆண்டு போர்த்துகேயர்கள் எமது நாட்டை ஆக்கிரமித்தனர். பின்பு ஒல்லாந்தர்களும் இறுதியாக பிரித்தானியர்களும் எங்களை ஆக்கிரமித்தனர். இவர்கள் காலனித்துவ ஆட்சியாளர்கள் என அழைக்கப்பட்டனர். அவர்கள் ஏறத்தாழ 450 ஆண்டுகள் எங்களை ஆட்சி செய்தனர்.

1948 இல், அதாவது சுமார் 75 ஆண்டுகளுக்கு முன்பு, பிரித்தானியர்களிடமிருந்து சுதந்திரம் பெறுவதற்காக எமது முன்னோர்கள் ஒன்றிணைந்து போராடினர். இதனால் நாங்களே எமது நாட்டை ஆள்வதற்கு தீர்மானித்தோம். பிரித்தானியர்கள் எங்கள் நாட்டை ‘சிலோன்’ என்று அழைத்தனர். ஆனால் பின்பு நாங்கள் எங்களது நாட்டின் பெயரை ‘ஸ்ரீலங்கா’ அதாவது இலங்கை என்று மாற்றிக் கொண்டோம்.

இவையே ஒரு நாட்டை உருவாக்குகின்றன- சில நிலப்பகுதிகள், அவற்றை தங்களது என்று கருதும் மக்கள், எங்களை வடிவமைத்துக் கொள்ளல் அத்துடன் மிகவும் முக்கியமான விடயங்களுள் ஒன்றாக இணைந்து வாழ்வதற்கான விருப்பம் என்பனவாகும்.

எவ்வாறாயினும், ஒரு நாட்டின் மக்கள் என்பதற்காக அந்த மக்கள் அனைவரும் ஒன்றாக அமைதியாக வாழ்வது எப்படி என்பதனை எப்பொழுதும் அறிந்து வைத்திருப்பார்கள் என்று கருத முடியாது.



# சண்டைப் போடுவது பயன் தருமா?

இலங்கை ஓர் அழகான நாடு.

எம்மிடம் அழகான மலைகள், கடற்கரைகள், மழைக்காடுகள், புல்வெளிகள், ஆறுகள், நீர்வீழ்ச்சிகள் உள்ளன.

வியப்பூட்டும் வனவிலங்குகள், திமிங்கிலங்கள் மற்றும் டொல்பின்கள் எமது கடலில் உள்ளன. யானைகள், சிறுத்தைகள் எமது காடுகளில் உள்ளன. பறவைகளும், வண்ணத்திப்பூச்சிகளும் எமது வான் பரப்பில் உள்ளன.

நாங்கள் வண்ணமயமான வரலாறுகளின் மத்தியில் வாழ்ந்துகொண்டிருக்கின்றோம். அவையாவன, பழங்கால விகாரைகள், கோவில்கள், பள்ளிவாசல்கள். நீர்ப்பாசன வலையமைப்புகள், தாங்கிகள் மற்றும் சிலைகள், காலனித்துவ கோட்டைகள், கிறிஸ்தவ மத வழிபாட்டுத்தளங்கள் மற்றும் கட்டிடங்கள்.

நாம் அனைவரும் ஒன்றிணைந்து சிறப்பான கலைகளையும், பல இசை, நாட்டியங்களையும், அரங்கக் கலைகளையும், மிகவும் சுவையான உணவுகளையும் படைத்துள்ளோம்.

எமது மக்களும் அழகானவர்கள். இரக்கக் குணமுள்ளவர்கள், நன்றி மறவாதவர்கள், நல்ல விடயங்களை பகிர்ந்து அனுபவிக்கக் கூடியவர்கள். மகிழ்வானவர்கள். நாம் எமது விருந்தோம்பல் குணத்திற்காக நன்கு அறியப்பட்டவர்கள். அதாவது நாங்கள் விருந்தினர்களை நன்கு உபசரித்து அவர்களை நன்கு கவனித்துக்கொள்ளும் வழக்கத்தைக் கொண்டவர்கள்.

எமது நாட்டைப் பற்றி சிந்தித்து பெருமைப்பட பல விடயங்கள் உள்ளன. இதனால் தான் மற்றவர்கள் மோசமாக நடத்தப்படும் போதும் மற்றவர்கள் துன்புறுத்தப்படும் போதும் நாங்கள் துயரடைகின்றோம்.

இந்த வேதனை உணர்வு எங்கள் நாட்டினதும், மக்களினதும் அழகை அழித்து விடும்.

எமது நாட்டின் அழகை அழிப்பதற்கு எதிராகவும், மக்களின் துயர்களுக்கும் எதிராகவே மக்களின் போராட்டம் நடைபெறுகின்றது. எம்மை துன்புறுத்தி செல்வந்தர்களான அதிகாரம் படைத்த தரப்புகளுக்கு எதிராகவே இந்த போராட்டம் முன்னெடுக்கப்படுகின்றது.

எமது நாட்டின் அழகைப் பாதுகாப்பதற்காக நாங்கள் போராட முன்வருவோமாயின், அந்த போராட்டத்தை முன்னெடுப்பதற்கு படைப்பாற்றல் மிக்க அழகிய புது வழிமுறைகளை நாங்கள் உருவாக்க வேண்டும் அல்லவா?



# நாம் யார்?

ஆனால் இலங்கையை இலங்கையர்களின் நாடாக்குவது எது?

இலங்கையர் என்பது எமது அடையாளத்தின் ஓர் அங்கமாகும். எமக்கு வேறு பல அடையாளங்கள் உள்ளன. அவற்றை எமது இனம், மதம், மொழி, வகுப்பு என்று கூறலாம்.

எமது இன அடையாளங்கள் பற்றி பார்ப்போம். நாம் தமிழர்கள், முஸ்லிம்கள், பறங்கியர் மற்றும் சிங்களவர்கள் என்று அடிக்கடி பேசுகின்றோம். ஆனால் உண்மையில் எமது நாட்டில் 24 சிறிய இனக்குழுமங்கள் உள்ளன. அவற்றை உங்களால் பெயரிட முடியுமா?

அடுத்து மதம் பற்றி பார்ப்போம். இலங்கையில் பௌத்தம், கிறிஸ்தவம், இந்து, முஸ்லிம் ஆகிய மதங்களைப் பின்பற்றுபவர்கள் உள்ளனர். அத்துடன் இவற்றுக்கு அப்பாற்பட்ட பிற நம்பிக்கைகளை பின்பற்றுபவர்களும் உள்ளனர்.

இவ்வாறு பல வித்தியாசமான அடையாளங்களை உடைய உறவினர்களும் நண்பர்களும் உங்களுக்கு இருக்கக் கூடும்.

பலதரப்பட்ட அடையாளங்கள் மற்றும் கலாசாரங்கள் என்பது பலதரப்பட்ட வித்தியாசமான ஆடைகள், உணவுகள், பாரம்பரியங்கள் மற்றும் மொழிகளாகும்.

ஆனால் சிலவேளைகளில் இந்த வேறுபாடுகளை சிலர் மோசமான விடயமாக பேசுகின்றனர். சிலர் மக்கள் மத்தியில் உள்ள இந்த வேறுபாடுகளைக் கண்டு அச்சமடைகின்றனர். அதனை கேலிக்குரிய விடயமாகவும், சிறுமைப்படுத்தியும் பார்க்கின்றனர்.

சிலவேளைகளில் இந்த அடையாளங்களை அடிப்படையாக வைத்து நாம் ஒருவர் மீது ஒருவர் வேறுபாடு காட்டுகின்றோம். இவற்றை நாங்கள் எமது பெற்றோர்கள், ஆசிரியர்கள், சமூகங்கள், பாடசாலைப் புத்தகங்கள் மற்றும் தொலைக்காட்சிகளிலிருந்து கற்றிருக்கின்றோம்.

இவை தொடர்பில் கேள்வி எழுப்புவதற்கான நேரம் வந்துவிட்டது. அப்படி நீங்கள் சிந்திக்கவில்லையா?



# நாங்கள் எங்கு உரித்தானவர்கள்?

சமூகம் என்பது சிறப்பானதொரு சொல்.

ஒரு குறிப்பிட்ட மக்கள் ஒன்றாக வாழுதல் அல்லது ஒன்றாக வேலை செய்தல், ஒரே விதமான விழுமியங்களை பகிருதல், ஒருவருக்கொருவர் பொறுப்பு கூறுதல், ஒருவரிலிருந்து மற்றவர் நன்மைப்பெறல் மற்றும் அவர்கள் அதற்கு உரிமையானவர்கள் என்று உணர்ந்துகொள்தல்.

மதங்கள், இன குழுக்கள் என்பனவும் சிலவேளைகளில் ஓர் சமூகமாக உணரப்படக் கூடும். எமது அயலவர்கள், பாடசாலைகள், விளையாட்டுக்குழுக்கள் என்பனவும் பலதரப்பட்ட அளவினைக் கொண்ட சமூகங்களாகும்.

சிலவேளைகளில் ஒரு முழு நாடும் ஒரு சமூகமாக உணரப்படலாம். இவ்வாறு நிகழுமாயின் அது மிக முக்கியமானதொரு விடயமாகும். இதன் அர்த்தம் நாம் அனைவரும் அனைவரையும் கவனித்துக்கொள்கின்றோம் என்பதாகும்.

எமது சமூகங்கள் எமது அடையாளத்தின் மிகப்பெரியதொரு பகுதியாகும்.

ஒரு சமூகம் மற்றொரு சமூகத்தை விட உயர்வானது என்று திரும்ப திரும்ப கூறிக்கொண்டே இருப்பதனூடாக சமூகங்களுக்குள் குழப்பங்களை ஏற்படுத்த முடியும் என்பதனை அரசியல்வாதிகள் நன்கு கற்று வைத்துள்ளனர்.

பல்வேறுபட்ட சமூகங்கள் மத்தியில் சந்தேகத்தினையும் அச்சத்தினையும் ஏற்படுத்துவதனூடாக தாம் செய்யும் மோசமான விடயங்களையும், தவறுகளையும் அவதானிப்பதனை மக்கள் நிறுத்தி விடுவார்கள் என்று எமது அரசியல்வாதிகள் நன்கு தெரிந்து வைத்துள்ளனர்.

இது இலங்கையில் அதிகளவில் இடம்பெற்று வருகின்றது.

மற்றவர்களை தாழ்த்தாமல் நம் சமூகங்களை நாம் கொண்டாடவும் அரவணைக்கவும் முடியாதா?



# யார் எங்களுடையதை அழித்தது?

நாமும் நமது குடும்பங்களும் வாழ்வதற்கென வீடுகள் உள்ளன.

எமது வீடு பாதுகாப்பானதாகவும், மகிழ்ச்சிகரமானதாகவும் இருக்க வேண்டும். நாம் சண்டையிட்டால், அல்லது ஏதாவது கெடுதல் எமது அன்புக்குரியவர்களுக்கு நடந்துவிட்டால் வீடுகளில் அமைதியும் மகிழ்ச்சியும் இருக்க மாட்டாது.

எம்மில் சிலருக்கு, வீடு பாதுகாப்பானதாகவும், மகிழ்ச்சிகரமானதாகவும் இருப்பதில்லை. ஏனெனில், அதனை கலவரம் செய்பவர்கள், பாதுகாப்பு தரப்பினர் அல்லது பயங்கரவாதிகள் இல்லாமல் செய்திருப்பார்கள்.

சுதந்திரத்திற்கு பின்னர் இலங்கையர்கள் பலர் - பெரும்பாலும் வடக்கு கிழக்கில் தமிழர்களும் முஸ்லிம்களும்- நீண்ட கால யுத்தத்தினால் தமது வீடுகளை பலமுறை இழந்துள்ளனர். இராணுவம் இன்றும் இந்த வீடுகளை திரும்பி வழங்காமல் பயன்படுத்திக் கொண்டு இருக்கின்றது.

1983ல் தமிழ் மக்களுக்கெதிராக மிகவும் மோசமான கலவரம் இடம்பெற்றது. இதனால் பல வீடுகள் அழிக்கப்பட்டன.

2014 மற்றும் 2018ல் முஸ்லிம் மக்களுக்கு எதிராக கலவரங்கள் இடம்பெற்றன.

மக்கள் வன்முறைகள் காரணமாக தப்பியோடினர். சிலர் நாட்டின் மற்றைய பகுதிகளுக்கு சென்றனர். மேலும் சிலர் வெளிநாடுகளுக்கு சென்றனர்.

கொழும்பில், அரசியல்வாதிகள் சிறிய வீடுகளை அழித்துவிட்டு அவற்றுக்கு பதிலாக பெரிய கட்டிடங்களை நிர்மாணிக்க தீர்மானித்தனர். இதன் காரணமாக பல வறிய மக்கள் அவரவர் வீடுகளிலிருந்து பலவந்தமாக வெளியேற்றப்பட்டனர்.

சிலவேளை உங்களது உறவினர்களும், நண்பர்களும் இவ்வாறு வீடுகளிலிருந்து வெளியேற்றப்பட்டிருக்கலாம். சிலவேளை உங்களுக்கும் இவ்வாறு நேர்ந்திருக்கக் கூடும்.

உங்களுக்கும் அல்லது நீங்கள் அறிந்தவர்களுக்கும் இவ்வாறு நடந்திருந்தால் அதனை எவ்வாறு நீங்கள் உணர்ந்தீர்கள்?



# எப்படி? கொஹொமத? ஹவ்?

எமது மக்கள் மூன்று பிரதான மொழிகளைப் பேசுகின்றனர். அவை தமிழ், சிங்களம், ஆங்கிலம் ஆகியனவாகும். அத்துடன் குறியீட்டு மொழியும் பயன்படுத்தப்படுகின்றது.

நீங்கள் ஒன்றுக்கு மேற்பட்ட மொழிகளை பேசினால் உங்களது மூளை நன்கு விருத்தியாகும் என்று விஞ்ஞானிகள் கூறுகின்றனர்.

உங்களால் எத்தனை மொழிகள் பேச முடியும்?

எந்த மொழி உங்களுக்கு மிகவும் விருப்பம்?

சுதந்திரத்திற்கு பின்பு, எமது அரசியல்வாதிகள் குறிப்பிட்டதொரு சட்டத்தை உருவாக்கி சிங்கள மொழிக்கு மட்டும் பெரும் அந்தஸ்தை அளித்தனர். மக்களுக்காக பணியாற்ற யாராவது விரும்புவார்களாயின் -தமிழ் மொழி மட்டும் பேசும் மக்கள் இருக்கும் இடமாக அது இருந்தாலும்- அவர்கள் கட்டாயம் சிங்களம் கற்றிருக்க வேண்டும்.

இந்த சட்டம் காரணமாக தமிழ் மொழியையோ அல்லது ஆங்கில மொழியையோ மட்டும் பேச தெரிந்தவர்கள் அந்நியப்பட்டவர்களாக உணர்ந்தனர். அவர்கள் மோசமாக நடத்தப்பட்டனர். சிலர் தங்களது தொழில்களை இழந்தனர். பலர் நாட்டை விட்டு வெளியேறினர்.

ஒன்றாக இணைந்து பாடசாலைகளிலும், வகுப்பறைகளிலும் கல்வி கற்று வந்த பிள்ளைகள் தமிழ், சிங்களம் ஆகிய தனித்தனி வகுப்பறைகளுக்கும் பாடசாலைகளுக்கும் பிரித்து அனுப்பப்பட்டனர்.

பல ஆண்டுகளுக்கு பின்னர், 1987ல் இந்த சட்டம் மாற்றப்பட்டது. எவ்வாறாயினும், அதன் பாதிப்புகளை நாம் தொடர்ந்தும் அனுபவிக்க வேண்டியதாயிற்று.

எமது மூன்று மொழிகளும் இன்றும் சமமாகக் கருதப்படுவதில்லை.

உங்களது மொழியை பேசும் போது நீங்கள் ஒரு பாதுகாப்பற்ற நிலையை உணர்ந்தால், போதுமானளவு தகவல்களைப் பெற முடியாமல் இருந்தால், உங்களால் எதுவும் செய்ய முடியாமல் இருந்தால் உங்களுக்கு எப்படியிருக்கும் என்று சிந்தித்துப்பாருங்கள்.



# நீங்கள் எதனை விரும்புகின்றீர்கள்?

இலங்கையர்களாகிய நாம் பல மதங்களைப் பின்பற்றுகின்றோம்.

பெருமளவில் கிறிஸ்தவம், இஸ்லாம், இந்து சமயம் மற்றும் பௌத்தம் ஆகிய மதங்களே பின்பற்றப்படுகின்றன. எம்மில் சிலர் மற்றைய சில மதங்களையும் பின்பற்றுகின்றார்கள். மற்றும் சிலரோ எந்த மதங்களையும் பின்பற்றுவதில்லை.

இவ்வாறே ஒரு காலத்தில் எமது ஆட்சியாளர்கள் சிங்களம் மிகவும் முக்கியமான மொழி என்று கூறி வந்தனர். அவர்கள் தற்போதும் பௌத்தம் மிகவும் சிறப்பான மதம் என்கின்றனர். இது பிரச்சினைகளை உருவாக்கியது.

சில மதத் தலைவர்கள் தங்களது மதத்தைப் பின்பற்றுவதில் குறைவான அக்கறையைக் காட்டிய அதேவேளை தங்களை பலம் வாய்ந்தவர்களாக மாற்றிக் கொள்ளவும், பணம் ஈட்டுவதிலும் ஈடுபாடு காட்டி மற்றைய மதத்தவர்களை இழிவுப்படுத்தி வந்தனர்.

எம்மில் சிலர் மதத்தின் பெயரால் கொலை செய்யப்பட்டனர்.

1987ல் ஒரு நாள், பஸ்ஸில் பயணம் செய்து கொண்டிருந்த பௌத்த துறவிகள் சிலர் எல்.ரீ.ரீ.ஈ என்ற குழுவினரால் படுகொலை செய்யப்பட்டனர்.

நீண்ட கால யுத்தத்தின் போதும், அந்த யுத்தம் முடிவுற்ற பின்பும், இராணுவம் வடக்கு கிழக்கில் பல புனிதமான இந்து சமய கோவில்களை அழித்தன.

கடந்த மூன்று ஆண்டுகளுக்கு முன்பு, 2019ல் 250க்கும் மேற்பட்ட சிறுவர்கள், பெண்கள் மற்றும் ஆண்கள் உயிர்த்த ஞாயிறு தினமன்று தேவாலயங்களில் வைத்து படுகொலை செய்யப்பட்டனர்.

எமது மதங்கள் எங்களை மேன்மைப்படுத்த வேண்டும், மற்றவர்கள் மீது அன்புக் காட்ட கற்றுக்கொடுக்க வேண்டும். அது எம்மைப் போன்ற பலருக்கு அவ்வாறு தான் செய்கின்றது. ஆனால் மதத்தின் பெயரால் பல மோசமான விடயங்களும் நடைபெறுகின்றன.

ஒவ்வொருவரும் தாங்கள் நம்பிக்கை கொள்ளும் மதத்தைப் பின்பற்றுவதற்கான பாதுகாப்பினைக் கொண்டிருக்க வேண்டியது அவசியம் அல்லவா?



வகுப்பு

# இது அவசியமா?

வகுப்பு என்றால் என்ன என்பதை விளக்குவது எளிதான விடயமல்ல.

இலங்கையில் மக்கள் சில சந்தர்ப்பங்களில் மொழி, மதம் அல்லது இனம் காரணமாக பாரபட்சமாக நடத்தப்பட்டனர் என்பது பற்றி இப்பொழுது உங்களுக்கு தெரியும். தமது வகுப்பு காரணமாகவும் ஒரு சில மக்கள் பாரபட்சத்திற்குள்ளாகின்றனர்.

வகுப்பினை அறிந்து கொள்ள இருக்கும் ஒரு வழிமுறையாக, ஒருவரைப் பார்த்து நீங்கள் வறியவரா, செல்வந்தரா அல்லது இரண்டுக்கும் இடைப்பட்டவரா என்று கேட்கலாம். ஆனால் பணம் மட்டுமே ஒருவரின் வகுப்பினை அறிய உள்ள வழிமுறை அல்ல.

உங்களது பெற்றோர்கள் செய்யும் வேலை, எந்த மொழி உங்களுக்கு இலகுவாக இருக்கின்றது, எங்கு வசிக்கின்றீர்கள் மற்றும் உங்களது மூதாதையர்கள் எவ்வாறான தொழில் செய்தனர் (இது சாதி என அறியப் பயன்படும்) என்பனவும் உங்கள் வகுப்பின் அம்சங்களுக்குள் அடங்கும்.

எங்களது சமூகம் பல அதிகார படிநிலைகளைக் கொண்டதாக இருக்கலாம்.

அதாவது, நாம் சில மக்களை எங்களுக்கு கீழானவர்களாகவும், மற்றும் சிலரை மேலானவர்களாகவும் கருதுவது என்று சொல்லலாம். நாம் மக்களை சமமாக கருதுவதில்லை. அவர்களை சமமாக நடத்துவதற்கும் தவறியுள்ளோம்.

பெரும்பாலான இலங்கையர்கள் இந்த வேறுபாடுகளை எண்ணி அதிக சக்தியையும் நேரத்தையும் விரயம் செய்கின்றனர். அத்துடன் சில மக்களை கீழ் சாதியினர் என்று மிகவும் மோசமாக நடத்துகின்றனர்.

இது முட்டாள்தனமானதும், மிகவும் வேதனையானதும் அல்லவா?



பாரபட்சம்

# வேறுபாடானவர்களை வேறுபாடாக நடத்துவதா?

பாரபட்சம் என்பது உங்களது அடையாளம் மற்றும் உங்களது திறமைகள் என்பனவற்றின் அடிப்படையில் உங்களை பாரபட்சப்படுத்துவதாகும்.

உங்களுக்கு எதிராக யாராவது பாரபட்சம் காட்டுவார்களாயின், அவர்கள் எந்தவிதமான அடிப்படையும் இன்றி உங்களுக்கு எதிராக ஓர் நிலைப்பாட்டை எடுத்து விட்டார்கள் என்று அர்த்தமாகும். உங்களது பெற்றோர்கள் யார், நீங்கள் எப்படி தோற்றம் அளிக்கின்றீர்கள், நீங்கள் எதனை நம்புகின்றீர்கள், உங்கள் பாலினம் எது?, எவ்வளவு பணத்தை நீங்கள் வைத்து இருக்கின்றீர்கள் என்றவாறு பல அடிப்படைகள் இதில் அடங்கும். இதனால் நீங்கள் மோசமாகவும், அநீதியாகவும் நடத்தப்படுவீர்கள்.

துரதிஷ்டவசமாக எமது நாட்டில் பலதரப்பட்ட பாரபட்சங்கள் காணப்படுகின்றன.

தமிழர்கள் மற்றும் முஸ்லிம்கள்: பெண்களும் சிறுமிகள்: வறிய மக்கள்: பெண் சமப்பாலுறவாளர்கள், ஆண் சமப்பாலுறவாளர்கள், மாற்றுப்பாலினத்தவர்கள், குயிர் மற்றும் LGBTIQ மக்கள்: விசேட தேவையுடையவர்கள் என்று அனைவரும் பாரபட்சத்தினை எதிர்கொள்கின்றனர்.

உங்களது அடையாளம் பற்றி சிந்தியுங்கள். நீங்கள் யார்? எது உங்களை உருவாக்குகின்றது? நீங்கள் எதனை நம்புகின்றீர்கள்? நீங்கள் எப்படி மற்றவர்களுக்கு தென்படுகின்றீர்கள்? நீங்கள் எதனை செய்ய விரும்புகின்றீர்கள்?

உங்களை இவ்வாறான காரணங்களுக்காக எவராவது பாரபட்சத்திற்குள்ளாக்கினால் நீங்கள் அதனை எப்படி உணர்வீர்கள்?



போராட்டம்

# எழுந்திருங்கள் எழுச்சியடையுங்கள்!

மாற்றத்திற்கான மக்களின் கோரிக்கையே போராட்டமாகும்.

எமக்கு முன்னர் போராட்டங்களில் ஈடுபட்டவர்களிடமிருந்து நாங்கள் பலவற்றைக் கற்றுக்கொள்ள முடியும். அதற்காக நாங்கள் அவர்களுக்கு நிறைய கடன்பட்டிருக்கின்றோம்.

அதிகாரத்தில் உள்ளவர்கள் எங்களது தேவைகளை நிறைவேற்ற தவறி விட்டார்கள் என்ற முக்கியமான தகவலை சொல்லவே நாங்கள் போராட்டங்களில் ஈடுபடுகின்றோம். “நீங்கள் செய்வது எங்களுக்கு பிடிக்கவில்லை” என்பதனை வெளிப்படுத்துவதாகவும் இது அமையலாம்.

மோசமான விடயங்கள் நடைபெறும் போது சில மக்கள் அவற்றை தமது வாழ்வின் ஓர் அங்கமாக ஏற்றுக்கொள்கின்றனர். (வேறு வழியில்லாததால்) மற்றவர்கள் தமது சிறந்ததொரு எதிர்காலத்திற்காகவும் எமது சந்ததிகளின் எதிர்காலத்திற்காகவும் போராடுகின்றனர்.

இலங்கை மக்கள் சிலரின் மிகவும் சக்தி வாய்ந்த போராட்டமாக சமத்துவத்திற்கான போராட்டம் அமைந்துள்ளது. மொழி உரிமைகளுக்காக, சமூக உரிமைகளுக்காக, பெண்கள் உரிமைகளுக்காக மற்றும் மாற்றுப்பாலினத்தவர்களின் உரிமைகளுக்காக பல போராட்டங்கள் நடைபெற்றுள்ளன.

தொழிற்சாலையில் பணிபுரியும் தொழிலாளர்கள், தேயிலைத் தோட்டத்தொழிலாளர்கள் நியாயமான சம்பளத்திற்காகவும். சமமாக நடத்தப்படுவதற்காகவும் போராடினர்.

சூழல் மாசடைவுக்கு எதிராகவும், வனவிலங்குகள். காடுகள் பாதுகாப்புக்காகவும், எமது இயற்கை வளங்களைப் பாதுகாக்கவும் மக்கள் போராட்டங்களை நடத்தினர்.

கொல்லப்பட்டவர்களின் காணாமற்போனவர்களின் குடும்பத்தினர் போராட்டங்களில் ஈடுபட்டனர்.

போராட்டத்தின் சக்தியின் காரணமாக பல தீமையான விடயங்கள் தடுக்கப்பட்டு, நல்ல விடயங்கள் பெறப்பட்டுள்ளன. எவ்வாறாயினும், சில போராட்டங்கள் புறக்கணிக்கப்பட்டன. அல்லது போராட்டக்காரர்கள் தாக்கப்பட்டனர். இவ்வாறு நடைபெறும் போதெல்லாம் எமது பிரச்சினைகள் அதிகரிக்கின்றன.

எமது நாட்டை நாங்கள் எவ்வளவு தூரம் நேசிக்கின்றோம் என்பதனை வெளிக்காட்டுவதற்கு போராட்டங்கள் சிறந்ததொரு வழிமுறையாகும்.

உங்கள் குடும்பத்தைச் சேர்ந்த யாராவது போராட்டங்களில் அதிகளவில் பங்குபற்றியுள்ளனரா?



பயங்கரவாதம்

# யார் அதிகம் பாதிக்கப்பட்டது?

வன்முறையினால் சாதாரண மக்களை அச்சுறுத்தி தமக்கு தேவையானதை பெற முயற்சிக்கும் ஒரு வழிமுறையாகவே பயங்கரவாதம் உள்ளது.

எமது நாட்டில் பாரபட்சங்களுக்கு எதிராக அமைதியான முறையில் போராடிய பல மக்கள் புறக்கணிக்கப்பட்டனர் அல்லது தாக்கப்பட்டனர். சிலர் தங்களது கோரிக்கைகள் அனைவருக்கும் தெரிய வேண்டும் என்பதற்காக வன்முறைகளைப் பயன்படுத்தினர்.

தமிழ் மக்களின் கோரிக்கையான சமமாக நடத்தப்பட வேண்டும் என்ற கோரிக்கையை அரசியல்வாதிகள் கேட்காததினால் எல்.ரீ.ரீ.ஈயினர் வன்முறைகளைப் பயன்படுத்தினர். வகுப்பு வாதத்திற்கு எதிராக போராடிய இளைஞர் யுவதிகளின் போராட்டங்களை அரசியல்வாதிகள் புறக்கணித்தமையினால் ஜே.வி.பி என்று அழைக்கப்படும் குழுவினர் வன்முறைகளைப் பயன்படுத்தினர்.

ஆயினும். “நாங்கள் சமூகத்திற்காக தான் போராடுகின்றோம்” என்று வன்முறைக் குழுக்கள் குறிப்பிட்டாலும். அந்த சமூகங்களே வன்முறைகளால் அதிகம் பாதிக்கப்படுகின்றன. தங்கள் உரிமைக்கான மக்களின் அமைதியான போராட்டங்களை இந்த குழுக்கள் வன்முறையைப் பயன்படுத்தி அடக்கி விடுகின்றன. எல்.ரீ.ரீ.ஈயினர் பல சிறந்த தமிழ் தலைவர்களையும் செயற்பாட்டாளர்களையும் கொன்றனர்.

மற்றைய சமூகங்களும் இதனால் பாதிக்கப்பட்டன. 1990ல் ஆயிரக்கணக்கான முஸ்லிம்களை அவர்கள் வாழ்ந்த பகுதியான யாழ்ப்பாணத்திலிருந்து எல்.ரீ.ரீ.ஈயினர் வலுக்கட்டாயமாக வெளியேற்றியனர்.

பயங்கரம் என்ற சொல்லிலிருந்தே பயங்கரவாதம் என்ற சொல் உருவானது. பயத்திற்கும் பயங்கரத்திற்கும் இடையிலான வேறுபாட்டை உங்களால் சிந்தித்துப் பார்க்க முடியுமா?

“பயங்கரவாதம்” என்றால் என்ன என்பது பற்றி சிந்தித்துப் பாருங்கள்.

இதோ இப்பொழுது உங்களுக்கு சிந்தித்துப் பார்ப்பதற்கு மிகவும் சவாலான விடயம் ஒன்றை தருகின்றேன். பல அரசியல்வாதிகளும், இராணுவத்தினரும், பொலிசாரும் தங்களுக்கு தேவையானதைப் பெற்றுக்கொள்ள மக்களுக்கு எதிராக வன்முறையைப் பயன்படுத்துகின்றனர்.

அவர்களை அப்படி செய்யச் சொல்வது எது என்று நீங்கள் நினைக்கின்றீர்கள்?



# எங்களால் புறக்கணிக்க முடியுமா?

இலங்கை அதிகமான வன்முறை வரலாற்றினை கொண்டது.

வன்முறையின் காரணமாக பல மக்கள் உயிரிழந்துள்ளனர்.

30 ஆண்டுகளாக எல்.ரீ.ரீ.ஈயினருக்கும் படையினருக்கும் இடையில் நடைபெற்ற சண்டையில் பல்லாயிரக்கணக்கான மக்கள் கொல்லப்பட்டனர். பல மக்கள் எல்.ரீ.ரீ.ஈயினரின் குண்டுத் தாக்குதல்களினாலும் கொல்லப்பட்டனர்.

யுத்தம் 2009ம் ஆண்டு மிகவும் துயரமான முறையில் முடித்து வைக்கப்பட்டது. படையினர் எல்.ரீ.ரீ.ஈயினரை விட முன்னேறியதால் ஆயிரக்கணக்கான சாதாரண தமிழ் மக்கள் நடுவில் அகப்பட்டுக்கொண்டனர். அவர்களை பாதுகாப்பதற்கு பதில், படையினர் ஆயிரக்கணக்கானவர்களை கொடூரமாகக் கொன்றது.

எமது வகுப்பு முறைக்கு எதிராக போராட்டத்தை ஜே.வி.பியினர் வழிநடத்தியபோது 1971 மற்றும் 1989ல் ஆண்டுகளில் ஆயிரக்கணக்கான இளைஞர்களும் யுவதிகளும் கொல்லப்பட்டனர். அவர்களின் போராட்டம் வன்முறையாக மாறியதுடன் இராணுவம் அதற்கு எதிராக மிகவும் வன்முறையாக நடந்துகொண்டது.

தவறுகளை சுட்டிக் காட்ட முயற்சித்த ஊடகவியலாளர்கள், மோசமான தலைவர்களுக்கு எதிராக சவால் விடுத்த பல நல்ல தலைவர்கள், எமது இயற்கையைப் பாதுகாக்க முயன்ற பலர் அமைதியாக்கப்பட்டனர் அல்லது கொல்லப்பட்டனர்.

ஒவ்வொரு வன்முறை செயலும் அதிகளவான வேதனைகளையும் பாதிப்பினையும் இழப்புகளையும் விட்டுச்செல்கின்றன.

எமது நாடு என்றோ ஒரு நாள் இவற்றிலிருந்து பாடம் கற்றுக்கொண்டு அனைத்துவிதமான வன்முறைகளையும் நிராகரிக்கும் என்று நம்புகின்றோம்.



# நாங்கள் எப்படி தீர்மானிக்க முடியும்?

ஜனநாயகம் என்பது சட்டங்களை உருவாக்கவும், தீர்மானங்களை எடுக்கவும், இணைந்து வாழவும் எமக்கு நாங்களே திட்டங்களை வகுத்துக்கொள்ளலை குறிக்கும். இதனால் நாங்கள் அனைவரும் மகிழ்ச்சியாக ஒன்றிணைந்து வாழ முடியும்.

ஏனெனில் நாங்கள் பலராக இருப்பதனால், சட்டங்களை உருவாக்குவதில் நாம் அனைவரும் அதில் ஈடுபட முடியாதுள்ளது. அதற்கு பதிலாக சட்டங்களை இயற்றவும், தீர்மானங்களை எங்களின் சார்பில் எடுக்கவும் வளர்ந்தவர்கள் சிலரை நாங்கள் தெரிவு செய்கின்றோம். இவர்களை நாங்கள் எங்கள் ‘அரசியல் பிரதிநிதிதிகள்’ என்று கூறுகின்றோம்.

எமது “பிரதிநிதிகள்” எம்மை “பிரதிநிதித்துவம்” செய்ய வேண்டும். அவர்கள் எல்லோருக்கும் நன்மை தரும் நீதியான சட்டங்களை உருவாக்க வேண்டும்.

சில குறிப்பிட்ட ஆண்டுகளுக்கு ஒரு தடவை, எங்களை பிரதிநிதித்துவம் செய்பவர்களை நாங்கள் தெரிவு செய்யும் போது அவர்கள் எவ்வாறான நல்ல விடயங்களை எங்களுக்காக செய்யப் போகின்றார்கள் என்று எங்களுக்கு தெரியப்படுத்த வேண்டும். இதனையே நாங்கள் ‘தேர்தல்’ என்கின்றோம்.

ஜனநாயகம் என்பது மிகவும் கடினமானதொரு பணியாகும்.

எமது பிரதிநிதிகளை தெரிவு செய்வதற்கு முன்பு நாங்கள் மிகவும் ஆழமாக யோசிக்க வேண்டும். நாங்கள் அவர்களை தெரிவு செய்த பின்பு நாங்கள் அவர்களை தொடர்ச்சியாக கண்காணிக்க வேண்டும். அத்துடன் அவர்களை நாங்கள் கண்காணிக்கின்றோம் என்பதனை அவர்களுக்கு தெரியப்படுத்தவும் வேண்டும். அவர்கள் எங்களுக்கு நல்லது செய்யாவிடின் அவர்களை நாங்கள் மீண்டும் தெரிவு செய்யக் கூடாது.

எமது ஜனநாயகத்தினால் நாங்கள் சோம்பேறிகளாகி விட்டோம். இதனால் ஒரே பிரதிநிதியை தெரிவு செய்யும் இலகுவான வழிமுறையை பின்பற்றிக் கொண்டு, அவர்கள் செய்யும் விடயங்களையும் கண்காணிப்பதனை நிறுத்தி விட்டோம். எமது பிரதிநிதிகள் அதிகாரத்தில் இருப்பதற்கான இலகுவான வழிமுறைகளை அறிந்துகொண்டு அதிகாரத்தினை சுயநலமாக பயன்படுத்தி வருகின்றனர்.

நாங்கள் சரிப்படுத்த வேண்டிய பிரதான பிரச்சினைகளுள் இதுவும் ஒன்றாக உள்ளது.



# எங்களை எங்களால் வழிநடத்த முடியாதா?

எமது அரசியல் பிரதிநிதிகளை 'தலைவர்கள்' என்று அழைக்க நாங்கள் பழக்கப்பட்டிருக்கின்றோம்.

இது தவறானதாகவும் இருக்கலாம்.

அவர்கள் எம்மை விட சிறந்தவர்கள் என்றும், சட்டதிட்டங்களுக்கு அப்பாற்பட்டு அவர்கள் சிறப்பாக கவனிக்கப்பட வேண்டியவர்கள் என்றும் நாம் அவர்களை சிந்திக்க வைத்துள்ளோம்.

அவர்கள் எங்களை ஒவ்வொருவருக்கும் எதிராக தூண்டிவிடுகின்றனர். மிக மோசமாக நடந்துகொள்கின்றனர், வாக்குறுதிகளை மீறுகின்றனர். அத்துடன் பல பொய்களை சொல்கின்றனர்.

அதிலும் மிகவும் மோசமானவன் களவெடுக்கின்றான் அல்லது எங்களில் ஒருவரைக் கொல்கின்றான்.

எமது நாட்டு மக்களின் முதன்மையான அரசியல் பிரதிநிதியாக ஜனாதிபதி இருக்கின்றார். எமது ஜனாதிபதிக்கு மிக அதிகளவான அதிகாரங்கள் உள்ளன. இந்த அதிகளவான அதிகாரங்கள் அவரை மோசமான காரியங்களைச் செய்ய வைக்கின்றது. எங்களுக்கு ஜனாதிபதி ஒருவர் வேண்டாம் என்று மக்களில் பலர் கூறுகின்றனர். ஜனாதிபதியே எல்லாவற்றையும் மோசமாக்கினார் என்றும் சொல்கின்றனர்.

எமது நாட்டின் தற்போதைய ஜனாதிபதியாக ரணில் விக்கிரமசிங்க பதவி வகிக்கின்றார்.

பெருமளவான போராட்டக்காரர்கள் அவருக்கும் அவரது குடும்பத்திற்கும் எதிர்ப்பு தெரிவிக்கின்றனர். அதற்கான காரணங்களை நீங்கள் கீழே வாசித்துக்கொண்டு செல்லும் போது அறிந்துகொள்வீர்கள்.

எமக்கு தேவை பல தலைவர்கள். எங்களில் ஒருவராகவும், எது எமது தேவை என்பதனை விளங்கிக் கொள்ளக் கூடியவர்களாகவும் அவர்கள் இருக்க வேண்டும். மக்கள் மீது செவிசாய்க்கக் கூடிய, மக்கள் மீது கரிசனையும், அன்பும் துணிச்சலும் கொண்ட நாட்டை நேசிக்கக் கூடிய தலைவர்களே எமக்கு தேவை. எங்களை ஒன்றுப்படுத்தக் கூடியவர்களே அவசியம்.

தலைவர்களுக்கு இருக்க வேண்டிய இதர தகுதிகள் எவையாக இருக்கலாம் என்று நீங்கள் நினைக்கின்றீர்கள்?



ஊழல்

# அதிகாரத்தில் உள்ளவர்கள் ஏமாற்றினால்?

அதிகாரத்திலுள்ளவர்கள் தங்களது அதிகாரத்தினைப் பயன்படுத்தி தவறான விடயங்களை செய்து எம்மை வேதனைப்படுத்தி, அதனால் செல்வந்தர்களாகி அதிக பலம் பெறுவதனை ஊழல் என்று குறிப்பிட முடியும்.

உங்களது ஆசிரியர் ஒவ்வொரு நாளும் உங்கள் பகலுணவை திருடி சாப்பிட்டால் என்னவாகும் என்று கற்பனை செய்து பாருங்கள். அத்தோடு, அதனை நீங்கள் உங்கள் அதிபருக்கு முறையிடும் போது அவர் உங்களை தண்டித்தால் என்னவாகும் என்றும் கற்பனை செய்து பாருங்கள்.

இந்த நிலையில் உங்களது ஆசிரியரும், அதிபரும் மோசடிக்காரர்கள் என்று நினைப்பதற்கு உங்களுக்கு உரிமை உள்ளது. ஏனெனில் இவர்கள் இருவருமே உங்களை விட அதிகாரம் உள்ளவர்கள் அத்துடன் உங்களை வேதனைப்படுத்த அவர்கள் இருவரும் ஒருவருக்கொருவர் உதவி செய்துகொள்கின்றனர்.

இதனை நிறுத்த எதுவும் செய்யாவிட்டால், உங்களின் ஆசிரியர்கள் பலரும் அவ்வாறு நடந்துகொள்வதற்கான வாய்ப்புகள் ஏற்படும். பிள்ளைகளிடமிருந்து திருடி விட்டு பின்பு அவர்களுக்கே தண்டனை வழங்குவதாக அது அமையும்.

ஆசிரியர்கள் திருடுவதற்கு பழகிய பின்பு அதனை ஒரு தவறான காரியம் என்பதனை நினைக்க மறந்துவிடுவார்கள். இதனால் மாணவர்கள் அனைவரும் பசியோடு இருக்க வேண்டிய நிலை ஏற்படும். அத்துடன் மாணவர்கள் பாடசாலைக்கு வருவதையே வெறுப்பார்கள்.

இந்த நிலைமை ஒரு நாட்டில் பல ஆண்டுகள் தொடர்ச்சியாக நடைபெற்றிருந்தால் என்னவாகும்? எமது அரசியல்வாதிகள் நீண்டகாலமாக ஊழல் மோசடிகளில் ஈடுபடுகின்றனர். அவர்களின் இந்த ஊழல் செயற்பாடுகள் நாட்டில் மோசமான விளைவுகளை ஏற்படுத்தியிருக்கின்றது.

அவர்கள் உங்களிடமிருந்தும் எங்களிடமிருந்தும் பெருமளவான பணத்தை களவாடியுள்ளனர். அதுமட்டுமன்றி பிறக்கப் போகும் எதிர்கால சந்ததிகளிடமிருந்தும் களவாடியிருக்கின்றனர்.



உறவினர் சார்பு

# “எனது தந்தை யார் என்பது உங்களுக்கு தெரியுமா?”

உறவு சார்பு என்பதும் ஒருவகையான ஊழல் மோசடியாகும்.

அதிகாரத்திலுள்ள தரப்பினர், தகுதியுள்ள மக்களுக்கு முக்கியமான தொழில்களை வழங்காமல் தங்களது குடும்பத்தினருக்கும், நண்பர்களுக்கும் அவற்றைப் பகிர்ந்து வழங்குவதனை இது குறிக்கின்றது.

எமது நாட்டின் முன்னாள் ஜனாதிபதி கோட்டாபய ராஜபக்சவின் சகோதரர் மகிந்த ராஜபக்ச மே 9ம் திகதி, 2022 வரை பிரதமராக இருந்தார். இவர் முன்பும் ஜனாதிபதியாக பதவி வகித்திருந்தார். அப்பொழுது அவர் முதன்முதலாக கோட்டாபயவுக்கு மிகவும் முக்கியமான பதவியை வழங்கினார். அவர்களின் சகோதரர்களான சமல், பெசில், மகிந்தவின் புதல்வர் நாமல் மற்றும் அவர்களின் குடும்ப உறுப்பினர்களும் மிகவும் முக்கியமான அதிகாரம் மிக்க பதவிகளை வகித்தனர்.

எமது நாட்டில் இந்த அதிகார உறவு முறை தொடர்பில் நீண்டதொரு வரலாறு உள்ளது. ராஜபக்சக்கள் மட்டும் இதற்கு உதாரணம் அல்ல.

எங்கு உறவுமுறை அதிகார நிலை இருக்கின்றதோ, அந்த நாட்டில் எல்லாமே இரகசியமாகவே இயங்கும். மிக முக்கியமான தொழில்கள் தகுதியான மக்களை சென்றடையாது. அதற்கு பதிலாக, அந்த குடும்பத்துடன் சிறந்த தொடர்புள்ளவர்களையே சென்றடையும். எப்படி இவற்றை செய்வது என்று தெரியாத காரணத்தினால் இவர்கள் தவறான முடிவுகளை எடுக்கின்றனர். ஊழல்களில் ஈடுபடுகின்றனர். அவர்கள் அதிகம் வசதிப் படைத்தவர்களாகின்றனர். முழு நாடுமே அதற்கான விலையை செலுத்த வேண்டியிருக்கின்றது.

இவ்வாறு தொடர்ச்சியாக நடைபெறுமாயின் மிகவும் மோசமான நிலைமை நாட்டுக்கு ஏற்பட்டு விடும்.

தற்போது, பல விடயங்கள் மோசமாகி விட்டன. இதனால் எமது மக்கள் வாழ்வதற்கே சிரமப்படுகின்றனர்.



# எப்படி அதனைப் பாதுகாக்கலாம்?

இந்த சிறு தீவின் நிலங்கள் மிகவும் சிறப்பானவை.

இது எமக்கு தேவையான அனைத்தையும் தருகின்றது:

எமது நாட்டின் நிலங்களை நாம் இயற்கையுடனும் மற்றவர்களுடனும் பகிர்ந்துகொண்டு பயன்படுத்த வேண்டும்.

அதிகாரம் மிக்க பல நாடுகள் மற்றும் கம்பனிகள் எமது நாட்டின் நிலங்கள் மீது அதிக ஆர்வம் காட்டுகின்றன. வேதனைக்குரிய விடயம் என்னவென்றால், நாங்கள் (மற்றும் எமது அரசியல்வாதிகள்) எமது நிலங்கள் தொடர்பில் தவறான சுயநலமான தெரிவுகளை மேற்கொண்டோம். நாங்கள் அதற்கு தீங்கிழைத்து விட்டோம் அல்லது தீங்கிழைக்கக் கூடியவர்களுக்கு அவற்றை வழங்கி விட்டோம். எமது விலங்குகள், மரங்கள் மற்றும் மக்கள் இதனால் பாதிக்கப்பட்டனர்.

சில ஆண்டுகளுக்கு முன்பு, 2013ல், ரத்துபஸ்வல என்ற இடத்தைச் சேர்ந்த மக்கள் அவர்களின் குடிநீர் அசுத்தமடைவதற்கு, அருகாமையில் இருக்கும் தொழிற்சாலையே காரணம் என்று கண்டறிந்தனர். அதற்கு எதிராக அவர்கள் போராடினர். ஆனால் இராணுவம் அங்கு வந்து போராட்டக்காரர்கள் மீது துப்பாக்கிச் சூடு நடத்தியதில் மூன்று பேர் கொல்லப்பட்டனர்.

இன்றும், 2022ல், இந்த கொலைகளுக்கான பொறுப்பினை எவரும் ஏற்கவில்லை.

கடந்த ஆண்டு, 2021ல் தீங்கு விளைவிக்கும் இரசாயணங்களையும், பிளாஸ்டிக்குகளையும் காவிச் சென்ற ஒரு விசாலமான கப்பலான எக்ஸ்பிரஸ் பேர்ள் எமது கடற்பரப்பில் தீப்பிடித்து சுமார் 12 நாட்கள் எரிந்துகொண்டிருந்தது. இந்த சுற்றாடல் பாதிப்பு எமது நாட்டுக்கும், கடல் வாழ் பிராணிகளுக்கும், மக்களுக்கும் பெரும் பாதிப்பினை ஏற்படுத்தியது.

எமது நிலங்கள் தொடர்பில் நாங்கள் உரிய கரிசனையை இப்பொழுது காட்டாவிடின் நீங்கள் வளர்ந்துபெரியவர்களானதும் உங்கள் வாழ்க்கை எப்படியிருக்கும் என்று நினைத்துப் பார்த்திருக்கின்றீர்களா?



கோவிட்–19
# பெருந்தொற்று என்றால் என்ன?

கோவிட்–19 என்பது ஒரு கொடிய வைரஸ்.

இந்த சின்னஞ்சிறிய வைரஸ் மக்களையும், விலங்குகளையும், தாவரங்களையும் சுகவீனமடைய செய்கின்றது. மனிதர்களில் இந்த வைரஸ் மிக விரைவாகப் பரவக் கூடியது. ஒரு வைரஸ் உலகம் முழுவதும் பரவுமாயின் அதனை பெருந்தொற்று என்று அழைப்பர்.

கடந்த 100 ஆண்டுகளில் உலகில் ஏற்பட்ட பெருந்தொற்றுக்களுள் மிகவும் மோசமான ஒன்றாக கோவிட்–19 உள்ளது. அனைத்து நாடுகளும் இதனால் பாதிக்கப்பட்டதுடன், அந்நாடுகள் மக்களை பாதுகாக்க பல்வேறு முயற்சிகளை எடுத்தன. சில நாடுகள் வெளியாட்களை நாட்டிற்குள் உட்பிரவேசிக்க விடவில்லை. நாட்டு மக்களை வெளியேறவும் விடவில்லை. சிலர் வழமைப்போன்று வாழ முயற்சித்தனர். சிலர் பல தடுப்பு நடவடிக்கைகளை எடுத்தனர்.

கோவிட்–19 இலங்கையை மோசமாக தாக்கியது. நீங்களும் உங்களைப் போன்ற பாடசாலை மாணவர்களும் பெரிதும் பாதிக்கப்பட்டீர்கள். எத்தனை நாட்கள் உங்கள் பாடசாலை மூடப்பட்டிருந்தது என்று தெரியுமா?

கோவிட்–19 வெளிநாடுகளில் தொழில் புரியும் இலங்கையர்களையும் பாதித்ததனால் அவர்கள் தொழில்களை இழந்தனர். அவர்களால் தமது குடும்பங்களுக்கு பணம் அனுப்ப முடியாத நிலைமை ஏற்பட்டது. கோவிட்–19 இலங்கையின் தொழில்களையும் பாதித்தது. மிகவும் சொற்பமானளவு சுற்றுலாப் பயணிகள் இலங்கைக்கு வந்து தனது பணத்தை செலவு செய்தனர். இந்த காரணங்களினால் எமது நாடு மிகவும் வறிய நாடாக மாறியது.

எமது அரசியல்வாதிகள் கோவிட்–19 ஐ பயன்படுத்தி மக்களை மேலும் பாரபட்சத்திற்குட்படுத்தும் வழிமுறைகளை தேடிக்கொண்டனர். கோவிட்–19 நோயினால் இறந்த முஸ்லிம் மக்களின் சடலங்களை அவர்களின் மத அனுட்டானங்களின்படி புதைக்க அனுமதிக்காமல் தகனம் செய்ய பலவந்தப்படுத்தப்பட்டனர்.

மிகவும் கடினமான காலத்தில் தேவையற்ற துயரங்களை அரசியல்வாதிகள் உருவாக்கினர்.



பணம்

# எல்லாம் எங்கே சென்றது?

பொருட்களை கொள்வனவு செய்வதற்கு மக்களுக்கு பணம் தேவை.

வேலை செய்வதனூடாக நாம் பணம் சம்பாதிக்கலாம். பின்பு நாங்கள் எப்படி அதனை செலவு செய்வது என்று தீர்மானிக்கலாம். இங்கு, நாங்கள் தெரிவுகளை மேற்கொள்கின்றோம். எப்பொழுதும் எங்களால் தேவையானவற்றை கொள்வனவு செய்ய முடியாது. இவ்வாறு திட்டமிடுதலை 'வரவு செலவுத் திட்டம்' என்கின்றோம்.

அதிகளவு பணத்தை செலவிட தேவையெனில், அதாவது ஒரு வீட்டை நிர்மாணிப்பதற்கோ அல்லது வாகனம் ஒன்றை வாங்குவதற்கோ நாங்கள் வங்கியிலிருந்து கடன் வாங்க முடியும். பின்னர் அந்த பணத்தை நாங்கள் மெல்ல மெல்ல மீள செலுத்த முடியும். இதனை 'கடன் வாங்குதல்' என்று கூறுவோம்.

நாடுகளுக்கும் பணம் தேவை. எங்களுக்கு தேவையானவற்றை வாங்குவதற்காக, பாடசாலைகளுக்காக, வீதிகளுக்காக, வைத்தியசாலைகளுக்காக மக்கள் தங்கள் பணத்தை வழங்குகின்றார்கள். இதனை வரி அறவீடு என்கின்றோம்.

நாடுகள் இதர செல்வந்த நாடுகளிடமிருந்தும், பணம் படைத்த கம்பனிகளிடமிருந்து வரவு செலவுத்திட்டத்தினூடாக, பணத்தை சேமிக்கின்றன. கடன் பெறுகின்றன.

இலங்கைக்கு பணப் பிரச்சினை உள்ளது. ஏனெனில்,

- நாங்கள் எங்களுக்கு தேவையானவற்றை உள்நாட்டில் உற்பத்தி செய்வதில்லை. நாங்கள் வெளிநாட்டுப் பணத்தைப் பயன்படுத்தி வெளிநாடுகளிடமிருந்து கடன் பெறுகின்றோம்.
- கோவிட்–19 காரணமாக நாங்கள் எமது நாட்டுக்கு வரும் பெருமளவு வெளிநாட்டுப் பணத்தை இழந்துவிட்டோம்.
- ஊழல் காரணமாக எங்களது எமது பெருமளவு பணம் களவாடப்பட்டுவிட்டது.
- மோசமான வரவு செலவுத் திட்டங்கள் காரணமாக நாங்கள் தவறான விடயங்களுக்கு பணத்தை செலவு செய்து விட்டோம். (பாடசாலைகளை விட மும்மடங்கு பணத்தை இராணுவத்திற்கு செலவு செய்து விட்டோம்).
- மோசமான தீர்மானங்களினால், நாங்கள் மீள செலுத்த முடியாதளவுக்கு கடன் வாங்கிவிட்டோம். எமது வரிகளைக் குறைத்து விட்டோம்.

இப்பொழுது எங்களிடம் போதுமானளவு பணம் இல்லை.



எரிபொருள்

# கேஸ் வரிசையில் நிற்பது யார்?

எங்களுக்கு தேவை எரிபொருள்- வாகனங்களுக்கு பெற்றோல், டீசல் தேவை. சமையலுக்கு மண்ணெண்ணெய் கேஸ் மின்சாரம் என்பன தேவை.

இலங்கையிடம் இவ்வகையான எரிபொருள் இல்லை. நாங்கள் அவற்றை பிற நாடுகளிடமிருந்து வாங்க வேண்டும். பணம் இல்லாவிட்டால் அவற்றை வாங்க முடியாது.

கடந்த 2021ம் ஆண்டு, மக்கள் சமையலுக்காக பயன்படுத்தும் கேஸ் சிலிண்டர்கள் வெடிக்க ஆரம்பித்தன. மக்கள் பலர் காயமடைந்தனர். வீடுகள் சேதமடைந்தன. கேஸ் கம்பனிகள் பணத்தை சேமிப்பதற்காக கேஸ் கலவையை மாற்றியமைத்த விடயம் பின்பு தான் தெரிய வந்தது.

2022ல், எமது வாகனங்களுக்கு தேவையான எரிபொருளோ, மின்சாரமோ எம்மிடம் இல்லை. இதனால் மின்வெட்டு நாளாந்தம் நடைபெறுகின்றது. மக்கள் பெற்றோல் நிலையங்கள் முன்னால் நீண்ட வரிசையில் காத்திருக்கின்றனர். சிலர் இந்த மிக நீண்ட வரிசையில் காத்திருக்கும் போது உயிரிழந்துள்ளனர்.

ஏதாவது ஒரு பொருள் பற்றாக்குறையாக இருக்கும் போது, மக்கள் அதிகளவில் அந்த பொருளை வாங்க முயற்சிக்கும் போது அந்த பொருள் அதிகளவு விலையைப் பெறுகின்றது. இது தான் எரிபொருளுக்கும் நடந்துள்ளது. எரிபொருள் அதிக விலை உள்ள பொருளாக மாறும் போது அனைத்தும் அதிக விலையைப் பெறுகின்றது. இதனால் தான் மின்சாரம் எங்களுக்கு அதிகளவில் தேவைப்படுகின்றது. வாகனங்களின் போக்குவரத்துக்கும் தேவையாக உள்ளது.

அத்துடன், எமது பணப் பிரச்சினையினால் எரிபாருள் வாங்க முடியாமல் பெரும் நெருக்கடி நிலை உருவாகி நாட்டின் செயற்பாடுகளை மேலும் மோசமாக்கியுள்ளது.

இதனை 'நச்சு வட்டம்' என்று கூறுவர்.



# எங்கு தவறு நடந்தது?

எமது மக்களில் பலர் விவசாயிகள்.

எமது உணவு தேவைக்காக அரிசி, காய்கறிகள், பழங்கள் என்பனவற்றை விவசாயிகள் மண்ணில் விளைவிக்கின்றனர். எமது மண் ஒரு காலத்தில் மிகவும் வளமானதாக இருந்தது. இதன் அர்த்தம் தாவரங்களுக்கு அதிக போஷாக்கு மிக்கது என்பதாகும்.

எவ்வாறாயினும், நீங்கள் தொடர்ச்சியாக ஒரே மண் பரப்பில் விளைச்சல் செய்வீர்களாயின் அந்த மண்ணின் வளம் குன்றிப்போகும். தொடர்ச்சியாக ஓர் புல்வெளிப் பரப்பில் ஒரு பந்தை தொடர்ச்சியாக அடித்துக் கொண்டே இருந்தால் அந்த இடத்தில் புற்கள் தனது பசுமையான வளர்ச்சியை நிறுத்தி விடும்.

இந்த நிலை மண்ணுக்கு ஏற்படும் போது, விவசாயிகள் மண்ணின் வளத்தை மீட்டு தாவரங்களை போஷிப்பதற்காக உரத்தைப் பாவிக்கின்றனர். ஆனால் அளவுக்கு அதிகமான உர பாவனை சுற்றாடலுக்கு பாதிப்பினை ஏற்படுத்துகின்றது. குறிப்பாக அதில் ஆபத்தான இரசாயணங்கள் உள்ளன.

இந்த பிரச்சினைக்கு தீர்வு காண இப்பிரச்சினை பற்றி நன்கு அறிந்தவர்களுடன் பேசி கலந்துரையாடி முடிவெடுத்திருக்க வேண்டும். விவசாயிகள் விளைச்சலை பற்றி தெரிந்தவர்கள். விஞ்ஞானிகள் இரசாயணங்கள் பற்றி தெரிந்தவர்கள்.

இவ்வாறு கலந்துரையாடாமல், முன்னாள் ஜனாதிபதி உரங்களுக்கு தடை விதிப்பதாகத் தெரிவித்தார். விவசாயிகள் இதற்கு தயாராக இருக்கவில்லை. இதனால் பலர் தமது விளைச்சல்களையும், பணத்தையும் இழந்தனர். இதனால் தான் உள் நாட்டில் விளையும் உணவுகளின் அளவு குறைந்து விட்டன.

தவறான முடிவுகளை எடுக்கும் மோசமான தலைமைத்துவத்திற்கு இது ஒரு உதாரணமாகும்.



# ஏன் நாங்கள் பசியுடன் இருக்கின்றோம்?

உணவானது மனிதர்களுக்கு எரிசக்தியாகும்.

மக்களால் பல விடயங்கள் இல்லாமல் வாழ முடியும். ஆனால் உணவு இன்றி நீண்ட நாட்கள் வாழ முடியாது.

அனைவருக்கும் போதுமான உணவு எப்பொழுதும் கிடைக்க வேண்டும். கடந்த காலத்தில் எடுக்கப்பட்ட தவறான முடிவுகள் காரணமாக, மற்ற நாடுகளிடமிருந்து உணவுகளை வாங்குவது சொந்த நாட்டில் உற்பத்தி செய்வதனை விட மிகவும் செலவு குறைவாக இருந்தது.

இப்பொழுது வெளிநாடுகளிடமிருந்து உணவுகளை கொள்வனவு செய்ய போதுமான பணம் எம்மிடம் இல்லை. இதனால் உணவுகளின் விலை சடுதியாக அதிகரித்துள்ளது.

எமது குடும்பங்கள் பல கடினமான சில முடிவுகளை எடுத்திருப்பது மிகவும் வேதனையாக இருக்கின்றது: உணவு வேளைகளை தவிர்த்தல், சில வகையான உணவுகளை உட்கொள்வதனை நிறுத்திக்கொள்ளல், அல்லது உணவுக்காக கையேந்துவது என்பன அதிகரித்துள்ளன. இந்த பிரச்சினை நாளுக்கு நாள் அதிகரித்து வருகின்றது.

மக்கள் பசியுடன் இருக்கும் போது, மக்களுக்கு தொழில் இல்லாத போது, அரசியல்வாதிகள் இவற்றுக்கு தீர்வு வழங்காத போது மக்கள் மோசமான நிலைக்கு தள்ளப்படுகின்றனர்.

இது மிகவும் கவலையான விடயமாகும். இப்படி நடைபெற்றிருக்க வேண்டிய அவசியமே இல்லை.



# “நெருக்கடி என்றால் என்ன?”

நெருக்கடி என்பது பிரச்சினைகள் மிகவும் மோசமாக தீவிரமடைவதனைக் குறிக்கும்.

சிலவேளைகளில் பல பிரச்சினைகள் ஒன்றிணைந்து பெரும் பிரச்சினைகளை உருவாக்கும் போது நெருக்கடி உருவாகின்றது. நீங்கள் நெருக்கடியின் மத்தியில் இருக்கும் போது தீர்வே இல்லை என்று நினைக்க தோன்றும்.

இங்கு நாம் பேசிய விடயங்கள் அனைத்தும், எமது நாடு முன்னெப்போதும் அல்லாதளவுக்கு பெரும் நெருக்கடியை எதிர்கொள்கின்றது என்பதனை வெளிப்படுத்துகின்றது.

எமது மக்கள் பாரபட்சத்திற்குள்ளாகியுள்ளனர். வன்முறையான முறையில் நடத்தப்பட்டுள்ளனர். எமது தலைவர்கள் எம்மிடமிருந்து களவாடியுள்ளனர். அவர்கள் மோசமான முடிவுகளை எடுத்துள்ளனர். எம்மிடம் பணம் இல்லை. எரிபொருள் செலவு அதிகரித்துள்ளது. மக்கள் பட்டினி கிடக்கின்றனர். சிலர் இறந்துபோயுள்ளனர்.

நெருக்கடி நேரத்தில் நாங்கள் ஒன்றிணைந்து புத்திசாலித்தனமாக நடந்துகொள்ள வேண்டும். முன்னோக்கி செல்வதற்கான வழிமுறைகளைத் தேடிக்கொள்ள வேண்டும்.

ஆனால், நாட்டில் பிரச்சினையே இல்லை என்றவாறும், இது அவர்களின் தவறு அல்ல என்றும் இன்னும் அரசியல்வாதிகள கூறிக் கொண்டிருக்கின்றனர். அவர்கள் நெருக்கடிக்கான பொறுப்பினை ஏற்க மறுக்கின்றனர்.

இதன் காரணமாகவே மக்கள் வெறுப்புணர்வுடன் போராட்டம் நடத்துகின்றனர்.



# இதயம், குடல், நுரையீரல்

நாம் என்ன செய்யலாம்?



கபுட்டு
காக்
காக்
காக்!

කපුටු
කාක්
කාක්
කාක්!

Kaputu
Kaak
Kaak
Kaak!



பிரஜாவுரிமை

# எமது பலத்தை தேடுதல்!

நாம் அனைவரும் இந்நாட்டின் பிரஜைகள்.

இலங்கை எமது நாடு. நாங்கள் இலங்கை மக்கள்.

நாங்கள் ஒன்றிணைந்து எமது நாட்டை முன்னேற்ற வேண்டும்.

நாங்கள் எமது பிரதிநிதிகளை தெரிவு செய்து விட்டு நாட்டை அவர்களிடம் ஒப்படைத்து விட்டோம்.

இதனால் தான் நாங்கள் நெருக்கடிக்குள்ளாகியுள்ளோம்.

எமது அரசியல்வாதிகளே இதற்கு பொறுப்பு.

ஆனால் நாட்டின் பிரஜைகளாக நாங்களும் இந்த தவறுக்கு பொறுப்பு கூற வேண்டும்.

கடந்த காலங்களிலும் நிலைமை மோசமாகியிருந்தது, 'சில' மக்கள் மோசமாக நடத்தப்பட்டனர்:

(பாரபட்சத்தை நினைவூட்டிக்கொள்ளுங்கள்?).

மக்கள் 'அனைவரும்' ஒன்றிணைந்து போராடினால் ஒழிய எதுவுமே மாறப் போவதில்லை.

இம்முறை நெருக்கடி மிகவும் மோசமாக உள்ளது. அனைவரும் பாதிக்கப்பட்டுள்ளோம்.

முதல் முறையாக, நாம் அனைவரும் மாற்றம் பற்றி பேசுகின்றோம் என்று உணர முடிகின்றது.

ஆனால், நாங்கள் நினைவிற்கொள்ள வேண்டியது, எங்களில் சிலருக்கு போராட்டத்தில் ஈடுபடுவது இலகுவானதாகவும், ஆபத்து இல்லாததாகவும் இருக்கும். நாங்கள் இனம், மொழி, வகுப்பு என்பனவற்றால் பாதுகாக்கப்பட்டுள்ளோம். இது 'சிறப்புரிமை' எனப்படும்.

நாங்கள் ஒருவரையொருவர் கவனித்துக்கொள்ள வேண்டும்.

சிறப்பு சலுகைப் பெற்றவர்கள் அந்த சலுகையை நன்கு பயன்படுத்திக்கொள்ள வேண்டும்.

இவ்வாறு தான் நாங்கள் பிரஜைகளாக ஒன்றிணைந்து மாற்றங்களை ஏற்படுத்திக்கொள்ள முடியும்.



மக்களின் போராட்டம்

# அனைவரும் ஒன்றிணைதல்!

முன்பு பல போராட்டங்கள் நடைபெற்றுள்ளன. ஆனால் இம்முறையோ போராட்டம் வித்தியாசமானதாக இருக்கின்றது.

முதற்தடவையாக நாம் அனைவரும் உரிமைகள் பற்றி பேசுகின்றோம். அரசியல்வாதிகள் மீது ஆத்திரப்படுகின்றோம். அதேவேளை மாற்றத்திற்கான கோரிக்கைகளை விடுக்கின்றோம்.

எம்மில் பலர் நாட்டின் ஆழமான பிரச்சினைகள் பற்றி பேசுகின்றனர். சுய அடையாளம் காரணமாக மக்கள் எவ்வாறு மோசமாக நடத்தப்பட்டனர் என்று பேசுகின்றோம். நாங்கள் ஒன்றுப்பட்டு இயங்குவதற்கு முயற்சிக்கின்றோம்.

பல இளைஞர்கள் யுவதிகள் இந்த கலந்துரையாடலை முன்னெடுத்துச் செல்கின்றனர். அவர்களிடம் தயக்கங்கள் இல்லை. அதாவது அவர்களால் எல்லாவற்றையும் தெளிவாக காண முடிகின்றது. ஏனெனில் அவர்கள் தவறான முடிவுகளை எடுத்த கடந்த கால சந்ததியினர் அல்லர்.

“தமிழ், முஸ்லிம் மக்கள் மற்றும் சிறுபான்மை பாலினர் நடத்தப்பட்ட விதம் தவறு” என்று அவர்களால் சொல்ல முடியும். “நாங்கள் மாறுவோம்” என்று அவர்களால் கூற முடியும்.

பிரதான போராட்டக் களமாக காலிமுகத்திடல் உள்ளது. போராட்டக்காரர்கள் அந்த இடத்திற்கு கோட்டாகோ கம என்று பெயர் சூட்டியுள்ளனர். முன்னாள் ஜனாதிபதி கோட்டாபயவை பதவியில் இருந்து விலகிச் சென்று விடுமாறு அவர்கள் பிரதான கோரிக்கையை முன்வைத்திருந்தனர். ஆனால் நாடு முழுவதும் அரசாங்கத்திற்கு எதிரான போராட்டங்கள் நடைபெற்று வருகின்றன. கோஷங்களை எழுப்பிக்கொண்டு, சுவரொட்டிகளை பிடித்துக்கொண்டு, பாடல்களைப் பாடிக்கொண்டு, அரங்கச் செயற்பாடுகளை முன்னெடுத்துக்கொண்டு, சொற்பொழிவுகளை நடத்திக்கொண்டு மக்கள் கோரிக்கைகளை முன் வைக்கின்றனர்.

எமது மக்கள் போாட்டங்களினூடாக, நாங்கள் பிரஜைகள் என்ற வகையில் கூட்டாக ஒன்றிணைந்து எதிர்ப்பு தெரிவிப்பதற்காக பொதுமக்களுக்கு உள்ள வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்கின்றோம். இதனூடாக, அதிகாரத்தில் இருப்பவர்களுக்கு இது எமது நாடு என்ற தகவலை நாங்கள் வெளிப்படுத்துகின்றோம்.



# அனைத்தும் எம்மிடம் உள்ளன!

உரிமைகள் இருக்கின்றன என்பதன் அர்த்தம் நாம் அனைவரும் சமமாகவும் நீதியாகவும் நடத்தப்பட வேண்டும் என்பதாகும். எமது வாழ்க்கைக்கு தேவையான அனைத்துவிதமான அடிப்படை விடயங்களையும் பெறுவதற்கும் எமது கனவுகளை நிறைவேற்றவும் எங்களுக்கு சுதந்திரம் உள்ளது.

அனைத்து மக்களுக்கும் உரிமைகள் உள்ளன. நாங்கள் மனிதர்கள் என்பதால் எமக்கு இந்த உரிமைகள் உள்ளன. நாங்கள் எமது உரிமைகளுடன் பிறந்துள்ளோம். நாடுகள் அவற்றை பாதுகாக்க வேண்டும்.

எமக்குள்ள உரிமைகள்:



- பாரபட்சங்கள் இன்றியும் சமமாகவும் நடத்தப்படுதல்.
- எமது பிரதிநிதிகளை தெரிவு செய்தல்
- எமது ஜனநாயகத்தில் பங்குபற்றுதல்.
- தலையீடுகள் ஏதும் இன்றி எமது நம்பிக்கைகளைப் பின்பற்றுதல்.
- அச்சமின்றி தனது மொழியைப் பேசுதல். மதிக்கப்படுதல்.
- எதனை நம்புகின்றோம் என்பதனை வெளிப்படையாகக் கூறுதல்
- விடயங்களைக் கண்டுபிடித்தல், கற்றுக்கொள்ளல்
- வன்முறைப் பாதிப்புகளிலிருந்து பாதுகாப்பு பெறுதல் விலகியிருத்தல்
- சிறந்த சுகாதார வசதிகளைப் பெறுதல்
- உணவு உட்கொள்ளல், ஆடைகளை அணிதல்
- பாடசாலைக்கு சென்று கற்றுக்கொள்தல்
- பாதுகாப்பான இருப்பிடம்.
- ஓய்வுப் பெறுதல். விளையாட்டுக்களில் ஈடுபடுதல்.
- கொடூரமான முறையில் தண்டனைப் பெறாமல் இருத்தல், தவறான முறையில் நடத்தப்படாதிருத்தல்.
- மோசமான விடயங்கள் நடைபெறும் போது நாட்டின் பாதுகாப்பைப் பெறல்

மிக முக்கியமாக, போராட்டங்களில் ஈடுபடுவதற்கான உரிமை எமக்கு உள்ளது.

நம்மில் பலர் இப்பொழுது அந்த உரிமையைப் பயன்படுத்திக் கொண்டிருக்கின்றனர்.

இதனால் தான், முன்னாள் ஜனாதிபதி “போராட்டங்களை நடத்த இடமளிக்கப்படும்” என்று கூறியது தவறான கூற்றாகும்.

எமக்கு அவரின் அனுமதி தேவையில்லை.

கோரிக்கைகள்

# எமது தேவை என்ன?

மக்களின் போராட்டம் மாற்றத்திற்கான பல கோரிக்கைகளாக உள்ளன.

ஆனால் அவை எவை?

கோரிக்கைகளுள் பிரதானமானது, ஜனாதிபதியும், அவரது குடும்பத்தினரும் பதவிகளை விட்டு விலக வேண்டும்.

அத்தோடு பலவிதமான கோரிக்கைகளும் உள்ளன:



- களவாடிய பணத்தை அரசியல்வாதிகள் மீள வழங்க வேண்டும்.
- நேர்மையான அன்பு உள்ளம் கொண்டவர்கள் பிரதிநிதிகளாக வேண்டும்.
- மோசமான சட்டங்கள் மாற்றப்பட வேண்டும். (உதாரணமாக: மீண்டும் எங்களுக்கு ஜனாதிபதி வேண்டாம்).

மக்கள் பலர் போராட்டங்களில் இணைந்துகொண்டால் எமது ஒற்றுமையும் பலமும் கூடும். கோரிக்கைகள் பலவற்றை முன்வைக்க முடியும். சில கோரிக்கைகள் மிக நீண்ட காலமாக நிராகரிக்கப்பட்டவை. மற்றவை புதியவை: அந்த பழைய மற்றும் புதிய கோரிக்கைகள் பின்வருமாறு:



- யுத்தம் நடைபெற்ற காலத்திலும், யுத்தத்தின் பின்பும் காணாமற்போனோர் மற்றும் கொல்லப்பட்டவர்களுக்கான நீதியைப் பெற்றுக்கொடுத்தல்.



- கொல்லப்பட்ட தாக்கப்பட்ட மற்றும் தண்டிக்கப்பட்ட ஊடகவியலாளர்கள் மற்றும் செயற்பாட்டாளர்களுக்கு நீதியைப் பெற்றுக்கொடுத்தல்.



- பயங்கரவாத தடைச்சட்டத்தை முற்றாக இல்லாமல் செய்தல். இந்த சட்டத்தைப் பயன்படுத்தி குற்றம் செய்யாத மக்களையும் பொலிசார் மிக நீண்ட காலம் சிறையில் தடுத்து வைக்க முடியும்.



- உணவு, எரிபொருள் மற்றும் வாழ தேவையான அடிப்படை விடயங்கள் மலிவாக கிடைக்க வழி செய்தல்

உங்களின் பெற்றோர்களும், அயலவர்களும் முன்வைக்கும் கோரிக்கைகள் பற்றி சிந்தித்துப் பாருங்கள்.

நீங்கள் ஏதாவது ஒரு கோரிக்கையை முன்வைக்க விரும்புவீர்களாயின், அது எதுவாக இருக்கும்?

# எமது அக்கறையை வெளிப்படுத்தல்

நாம் ஒருவர் மீது ஒருவர் அன்பும் அக்கறையும் வைத்துள்ளோம் என்பதனை வெளிப்படுத்த ஒன்றுப்பட்டு செயலாற்றுவதே ஒற்றுமை எனப்படுகின்றது.

கடந்த காலங்களில் இதனை நாங்கள் செய்யவில்லை என்று நாங்கள் முதலில் கூறியது உங்களுக்கு நினைவிருக்கின்றது அல்லவா? சிலர் பாரபட்சத்திற்குள்ளாகும் போது எங்களில் சிலர் அது தொடர்பாக அக்கறை காட்டவில்லை அல்லவா?

ஒற்றுமையைக் காட்டுவதற்கான முக்கியமான செயற்பாடு தான் மன்னிப்புக் கேட்டல். நாங்கள் செய்த விடயங்களுக்காக மன்னிப்புக் கேட்க வேண்டும். பாரபட்சங்களைத் தடுப்பதற்கு உரிய நடவடிக்கைகளை எடுக்காமல் விட்டதற்காகவும் நாங்கள் மன்னிப்புக் கோர வேண்டும்.

இது எப்பொழுதும் இலகுவானதல்ல. ஏனெனில், முன்பு நடைபெற்ற விடயங்களினால் அவர்கள் பாதிக்கப்பட்டுள்ளனர்.

இவ்வாறு சிந்தித்துப் பாருங்கள். கேலி பேசும் வழக்கத்தைக் கொண்ட ஒருவர் உங்களை நாளாந்தம் அடித்து துன்புறுத்தினால் எப்படி இருக்கும் என்று? ஆனால் இது பற்றி உங்கள் நண்பர்கள் எதுவும் சொல்வதில்லை. ஆனால் ஒரு நாள் அந்த நபர் உங்கள் நண்பர்களையும் அடித்தால், அவர்கள் எல்லோரும் வியப்படைந்து குழம்பிப் போவார்கள் அல்லவா? இது உங்களுக்கு எப்படி இருக்கும்?

மற்றவர்கள் வேதனைப்படும் போது அமைதியாக இருப்பது எவ்வளவு மோசமானது என்று எம்மில் பலர் இப்பொழுது விளங்கிக் கொண்டுள்ளனர்.

இந்த தவறுக்காக மக்கள் மன்னிப்புக் கேட்டுக் கொண்டிருக்கின்றார்கள். வேறுபாடு உள்ளவர்களுடன் மக்கள் ஒற்றுமையை வெளிக்காட்டிக் கொண்டிருக்கின்றனர்.

இது எமது மக்களின் போராட்டத்தை மிகவும் பலப்படுத்தியுள்ளது. எமது நாட்டுக்கு தேவையான மாற்றத்தை அது வெளிப்படுத்துகின்றது.



மறுமொழி

# அவர்கள் எதனை முயற்சித்தார்கள்?

அதிகாரத்திலுள்ளவர்களுக்கு மாற்றங்கள் தேவையில்லை.
ஏனெனில் அவர்கள் அவர்களுக்கு ஏற்றவாறு எல்லாவற்றையும் உருவாக்கி வைத்துள்ளனர்.
மக்கள் போராட தொடங்கும் போது, அரசியல்வாதிகள் சிரித்துக்கொண்டு நாளடைவில் அது சரியாகி விடும் என்பார்கள். ஆனால் நாங்கள் இன்னும் அதிகம் போராடுவோம்.
அதிகாரத்திலுள்ளவர்கள் போராட்டக்காரர்களைத் தாக்கத் தொடங்கி கைது செய்தார்கள். ஆனால் சட்டத்தரணிகள் அவர்களைப் பாதுகாக்க போராடினர்.
பின்னர் அவர்கள் ஊரடங்கு சட்டத்தை அமுலாக்கினார்கள். யாரும் வீதிக்கு இறங்க முடியாது என்றார்கள். ஆனால் எப்படியோ நாங்கள் வீதியில் இறங்கினோம்.
அதன் பின்பு, அவர்கள் சமூக வலைத்தளங்களை தடை செய்தார்கள். ஆனால் மக்கள் விபிஎன் என்ற தொழினுட்பத்தைப் பயன்படுத்தி சமூக வலைத்தளங்களுக்குள் பிரவேசித்தார்கள்.
போராட்டக்காரர்கள் வீடுகளுக்கு சென்று விடுவார்கள் என்று கருதி அதிகாரத்திலுள்ளவர்கள் தொடர்ச்சியான விடுமுறை தினங்களை அறிவித்தார்கள். ஆனால் அதற்கு பதிலாக போராட்டக்காரர்கள் ஜனாதிபதி மீது அதிருப்தியை வெளிப்படுத்த அவரது அலுவலகத்திற்கு முன்பாக கோட்டா கோ கம என்று பகுதியை உருவாக்கி தங்கியிருக்கின்றனர்.
அவர்கள் தங்களது பழைய உபாயத்தைப் பயன்படுத்த தொடங்கினர். தமிழ் முஸ்லிம் மக்களுக்கு எதிராக சிங்களவர்களை திசை திருப்புவது தான் அந்த உபாயம். ஆனால் இம்முறை அவர்களால் எங்களை முட்டாள்களாக்க முடியவில்லை.
அவர்கள் வீதிகளை மறித்து போராட்டக்காரர்கள் பேரணி நடத்துவதனை தடுத்தனர். ஆனால் மேலும் பல போராட்டக்காரர்கள் இணைந்து கொண்டனர்.
போராட்டக்காரர்கள் மீது கண்ணீர்ப்புகைப் பிரயோகம் மேற்கொள்ளப்பட்டது. துப்பாக்கிச் சூடும் நடத்தப்பட்டது.
அரசியல்வாதிகள் எதனை செய்தாலும் எமது மக்களின் போராட்டம் நாளுக்கு நாள் பலம்பெற்று வருகின்றது.





தாக்குதல்

# வன்முறை வெற்றிப் பெறாது

எமது மக்களின் போராட்டம் பலம்பெற்று வரும் நிலையில், அதிகாரம் மிக்க அரசியல்வாதிகள் முன்பை விட மிகவும் மோசமான விடயங்களில் ஈடுபடுகின்றனர்.

மே மாதம் 9ம் திகதி, 2022, பிரதமர் மகிந்த ராஜபக்ச பஸ் வண்டிகளில் ஆதரவாளர்களை கொழும்பில் உள்ள உத்தியோகபூர்வ இல்லமான அலரி மாளிகைக்கு வரவழைத்திருந்தார். அவர்கள் ஆவேசமான வன்முறைக் கும்பலாக இருந்தனர். போராட்டக்காரர்கள் மீது அவர்கள் தாக்குதல்களை நடத்தினர்.

அலரி மாளிகைக்கு முன்பாக இருந்த ஆர்ப்பாட்டக்காரர்கள் மீது முதலில் அவர்கள் தாக்குதல்களை நடத்தினர். பின்னர் கோட்டா கோ கம நோக்கி அவர்கள் நடந்துசென்றனர். கோட்டா கோ கமவில் அமைதியாக போராட்டங்களை நடத்திய போராட்டக்காரர்களை பொலிசார் பாதுகாக்க முயற்சிக்கவில்லை. அதற்கு பதிலாக போராட்டக்காரர்கள் மீது தாக்குதல் நடத்திப்பட்டதையும், கூடாரங்கள் எரிக்கப்பட்டமையையும் அவர்கள் வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்தனர்.

போராட்டக்காரர்கள் மீது தாக்குதல் நடத்தப்பட்ட செய்தி எல்லா நாட்டில் எல்லா இடங்களிலும் பரவியதும், கொழும்பில் இருந்து பல மக்கள் கோட்டா கோ கமவுக்கு வருகை தந்து மக்களின் போராட்டத்திற்கு ஆதரவு அளித்தனர். அவர்கள் மிகவும் ஆத்திரமடைந்தனர். மிகச் சிலர் மிகவும் வன்முறையாக நடந்துகொண்டனர். வன்முறைக் கும்பலை அவர்கள் தாக்கினர். அவர்கள் பயணித்த பஸ்களை தாக்கினர். அவர்களில் சிலரை ஏரிக்குள் தள்ளி விட்டனர். பின்னர் அதிகாரம் உள்ள தரப்பினரின் வீடுகளும் தீக்கிரையாக்கப்பட்டன.

மக்களுக்கு எல்லாம் போதும் என்று ஆயிற்று.

நிலைமை மேசாமானதும் பிரதமர் பதவியிலிருந்து மகிந்த ராஜபக்ச பதவி விலகினார். ஆனால் கோட்டாபய ராஜபக்ச ஜனாதிபதி தனது பதவியிலிருந்து அப்பொழுது விலக மறுத்துவிட்டார்.

வன்முறைகளைக் கைவிட்டு கோட்டா கோ கமவை மீள நிர்மாணிக்குமாறு அமைதிவழியில் போராடும் போராட்டக்காரர்கள் மக்களைக் கேட்டுக் கொண்டனர்.

வன்முறைகள் ஒருபோதும் தீர்வாகாது.




Kaputu
Kaak
Kaak
Kaak!
கரங்கள்,
பாதங்கள்,
குரல்கள்
நீங்கள்
என்ன
செய்யலாம்?
எப்படி?
கபுட்டு
காக்
காக்
காக்!

சிந்தியுங்கள்

# புத்தியைப் பயன்படுத்தல்

சிந்தித்தல் எம்மை நாட்டின் சிறந்த பிரஜைகளாக்கும்.

கேள்வி கேட்பது, மக்களிடம் பேசுவது, மாறுபட்ட கருத்துக்களுக்கு செவி சாய்ப்பது அதன் பின்பு ஒரு முடிவுக்கு வருவது என்பன மிகவும் அவசியம்.

மற்றவர்களும் போராடுகின்றார்கள் என்று நீங்களும் போராட்டம் செய்யக்கூடாது.

மற்றவர்கள் போராடவில்லை என்ற காரணத்திற்காகவும் நீங்களும் போராடாமல் இருக்கக் கூடாது.

உலகில் நடைபெற்ற சில முக்கியமான போராட்டங்கள் பிள்ளைகளினால் தான் ஆரம்பிக்கப்பட்டது. கிரேட்டா தன்பேர்க் பற்றி உங்களுக்கு தெரியுமா? காலநிலை மாற்றம் தொடர்பாக அவர் போராட்டம் நடத்தியது பற்றி உங்களுக்குத் தெரியுமா?

ஒரு சிறந்த சுறுசுப்பான பிரஜையாக எது உங்களுக்கு முக்கியம் என்பதனை நன்கு சிந்தித்துப் பார்த்து தீர்மானிக்க பழகிக் கொள்ள வேண்டும்.

எனவே, நீங்களே உங்களை இவ்வாறு கேள்வி கேட்பதனூடாக ஆரம்பியுங்கள்:



- எமது நாட்டுக்கு ஏற்பட்டுள்ள நிலையை நான் ஏற்றுக்கொள்கின்றேனா?
- எது மாற வேண்டும்?
- மோசமாக நடத்தப்பட்ட மக்களுடன் இணைந்து எவ்வாறு நான் ஒற்றுமையை வெளிக்காட்டலாம்?
- எனது முக்கியமான செய்தி எது?
- நான் எவ்வாறு எனது இந்த செய்தியைப் பாதுகாப்பாக பகிர முடியும்?
- நான் யாருடன் இணைந்து மிகப் பெரிய சத்தத்தை எழுப்ப முடியும்?

போராட்டத்தில் ஈடுபடுவதற்கு முன்பு பிரச்சினைகளுக்கான தீர்வுகள் பற்றிய சிந்தனைகள் அவசியமில்லை என்பதனை எப்பொழுதும் நினைவில் வைத்திருங்கள். ஆனாலும் தீர்வுகள் எதுவாக இருக்கலாம் என்பதனை சிந்தித்து வைத்திருப்பது ஒருவகையில் நல்லது.

படைப்பாற்றல்

# போராடுவதற்கான அழகிய வழிகள்

படைப்பாற்றலைக் கொண்டிருப்பது எப்பொழுதும் மகிழ்வானதும் குதூகலமானதுமான விடயமாகும்.

நீங்கள் படைப்பாற்றல் மிக்கவராயின், நீங்கள் உங்கள் கற்பனையையும் திறமையையும் பயன்படுத்தி நவீன ஆற்றல் மிக்க வழிவகைகளை உருவாக்கி உங்கள் செய்தியைப் பகிர்ந்துகொள்வீர்கள்.

உங்களது பிரதான செய்தி எது பற்றி நீங்கள் தீர்மானித்ததும், அதனை வெளிப்படுத்த சரியான வழிமுறை என்ன என்று சிந்திக்க வேண்டும்.

படைப்பாற்றல் என்பது மிகவும் விலை உயர்வான பொருட்களைப் பயன்படுத்தும் விடயம் அல்ல. உங்களிடம் குறைவான வசதிகள் இருப்பினும் நீங்கள் சிறந்த படைப்பாற்றல் மிக்கவராகலாம்.

மக்கள் போராட்டம் என்பது மிகவும் படைப்பாற்றல் மிக்கது! சுவரொட்டிகள், கோஷங்கள், பாடல்கள், சிலைகள், ஓவியங்கள், இணையத்தில் பரவும் நகைச்சுவைகளான மீம்ஸ், கூத்தாடும் பொம்மைகள், ஆடை அணிகலன்கள் மற்றும் அரங்காற்றுகை என்று மிகவும் வியப்பூட்டும் வகையில் அவை உள்ளன.

நாங்கள் படைப்பாற்றல் மிக்கவர்களாக இருந்தால், எங்களால் மக்களை சிரிப்பூட்டலாம். ஆத்திரமடைய செய்யலாம். வேதனைப்படுத்தலாம். ஆனால் மிகவும் முக்கியமான விடயம் தான் அவர்களின் கவனத்தைக் குவித்து சிந்திக்க வைக்க முடியும்.

உங்களால் ஏன் சுவரொட்டி ஒன்றை உருவாக்க முடியாது? படங்கள் பற்றி, சுலோகங்கள் பற்றி, பாடல் வரிகள் பற்றி சிந்தித்துப் பாருங்கள். பல வித்தியாசமான விடயங்களை முயற்சித்துப் பாருங்கள். அவற்றை:

- நகைச்சுவை
- சோகம்
- கோபம்
- புத்திசாலித்தனம்

இவற்றில் இரண்டு விடயங்களை இணைத்து உங்களால் ஏதாவது ஒரு செய்தியை வழங்க முடியுமா என்று பாருங்கள்.

பல நிறங்களைப் பயன்படுத்துங்கள். படங்களை வரையுங்கள். அவற்றை சுருக்கமாகவும் நேர்த்தியாகவும் செய்யுங்கள்!



# ஒரு பாடல் நடனம்

போராட்டம் எப்பொழுதும் சலிப்பானதாக இருக்க வேண்டிய அவசியம் இல்லை.

இந்த நேரம் மிகவும் கடினமான நேரம். மாற்றம் பற்றி நாங்கள் தீவிரமாக சிந்தித்துக்கொண்டிருக்கின்றோம்.

போராட்டக்காரர்கள் பாடக்கூடாது, ஆடக் கூடாது, மகிழ்ச்சியை வெளிப்படுத்தக் கூடாது என்று சிலர் கூறுகின்றனர்.

அது தவறு.

எமது கலாசாரம் பாடல்களாலும் கலைகளாலும் நிரம்பியுள்ளது. கஷ்டமான சூழ்நிலை ஏற்படும் போது நாங்கள் பாடுவோம், ஆடுவோம், பகிர்ந்துகொள்வோம். இப்படி தான் நாங்கள் சமூகத்துடன் பலமாக இணைந்துகொண்டு ஒற்றுமையைக் கட்டியெழுப்ப முடியும்.

நாங்கள் இங்கு செய்யவேண்டிய சிறப்பான விடயம் என்னவென்றால், நாங்கள் மகிழ்ச்சியுடன் இருந்தால், அதிகாரத்தில் இருப்பவர்களைப் பார்த்து சிரிக்க முடியும். இதனால் எம்மீது பிரயோகித்துள்ள அதிகளவு அதிகார பலத்தை அவர்கள் இழக்கத் தொடங்குவார்கள்.

எங்களது சிந்தனைகளில் அரசியல்வாதிகளை நாங்கள் மிகவும் உயர்வான மனிதர்களாகக் கருதி வைத்திருப்போம். அவர்களைப் பார்த்து பயப்படுவோம். அவர்கள் பெரிய ஆட்கள் என்றும், பலம் வாய்ந்தவர்கள் என்றும், எங்களை விட அதீத அதிகாரம் படைத்தவர்கள் என்றும் நாங்கள் நினைக்கின்றோம்.

நாங்கள் அவர்களைப் பார்த்து சிரிக்கும் போது, அவர்கள் எங்களைப் பார்த்து பயப்படுவதனை காண முடியும்.

இதனால் தான் அவர்கள் பாதுகாப்பு அரண்கள் பின்னால், பல பாதுகாப்பு படைகளின் பாதுகாப்புடன் இருக்கின்றார்கள். நாங்கள் ஒருவரையொருவர் வெறுத்து ஒதுக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் பழைய விளையாட்டுக்களில் ஈடுபடுகின்றனர்.

இதனால், மகிழ்ச்சியாக இருக்க வேண்டும் என்பதனை நினைவில் வைத்திருங்கள்.

மகிழ்ச்சியாக இருத்தல், சுதந்திரமாக இருத்தல், அச்சமின்றி இருத்தல் போராட்டத்தைப் பலப்படுத்தும் அல்லவா? இது பற்றி நீங்கள் என்ன நினைக்கின்றீர்கள்?



# புதுக் கருத்துக்களை வளர்ப்போம்!

நாங்கள் பகிர்ந்துகொள்ளும் போது தான் புதுக் கருத்துக்கள் உருவாகும்.

உங்களது கருத்துக்களைப் பகிர்ந்துகொள்வதற்கான புதிய வழிவகைகளை உங்களால் கண்டுபிடிக்க முடியுமா?

உங்களுக்கு தெரிந்த வளர்ந்தவர்களுடன் பேசுங்கள். நீங்கள் செய்யும் விடயங்களை அவர்களின் உதவியுடன் சமூக ஊடகங்களில் வெளிப்படுத்துங்கள். அல்லது உங்களது கலைப்படைப்புகளை பிரதி எடுத்து வைத்திருங்கள்.

பலர் தங்களது படைப்புகளை பகிர்ந்துகொள்கின்றார்கள். உரையாற்றுகின்றார்கள். செயலமர்வுகளையும் நாடகங்களையும் நடத்துகின்றார்கள்.

அவற்றிலிருந்து நீங்கள் கற்றுக்கொள்ள முடியும். நீங்களும் மக்களுடன் உரையாட முடியும். ஏன் நீங்கள் போராட்டம் செய்கின்றீர்கள் என்று அவர்களிடம் கேளுங்கள். அவர்களின் கோரிக்கைகள் எவை என்று கேளுங்கள். யாருடன் இணைந்து அவர்கள் ஒற்றுமையை வெளிப்படுத்துகின்றார்கள் என்று கேளுங்கள்.

இது கற்றுக்கொள்ளவும், பகிர்ந்துகொள்ளவும் எம் அனைவருக்கும் கிடைத்துள்ள ஒரு சிறந்த வாய்ப்பாகும். இந்த கற்றல் பாடப்புத்தகங்களிலோ ஆசிரியர்களிடமோ கிடைக்கப் போவதில்லை. ஆனால் நாடு முழுவதும் உள்ள பல்வேறுபட்ட அனுபவங்களைக் கொண்ட மக்களிடமிருந்து பல்வேறுப்பட்ட விடயங்களை கற்றுக்கொள்ள முடியும்.

இது எங்களது வரலாற்றில் மிக முக்கியமான ஒரு காலப்பகுதியாகும். இது எவ்வாறு முடியப்போகின்றது என்பது பற்றி எமக்கு தெரியாது. ஆனால் நாங்கள் வழமையாக செய்யும் விடயங்களில் மாற்றங்கள் ஏற்படும்.

எனவே நீங்கள் செய்யும் விடயங்களையும், பார்க்கும் விடயங்களையும் ஆவணப்படுத்தி பதிவாக வைத்திருங்கள். இவ்வாறு தான் எமக்கே எமக்கான வரலாற்றில் நாம் பங்குதாரர்களாக மாற முடியும்.

அதாவது மக்கள் போராட்டம் பற்றிய மக்களின் வரலாறு.



அன்பு காட்டுங்கள்

# மாம்பழங்களைப் பகிர்வோம்

போராட்டம் மிகவும் கடினமானதாரு செயற்பாடு. இது அச்சமூட்டுவதாகவும் இருக்கலாம். போராட்டக்காரர்கள் களைப்படைந்து, பசியுடன், கவலையுடன் கோபத்துடன் இருப்பதனை நீங்கள் பார்த்திருப்பீர்கள். அவர்களுக்கு அனைவரினதும் ஆதரவு தேவை.

நாம் ஒருவர் மீது ஒருவர் அன்பு காட்டும் போது ஒற்றுமையை வெளிப்படுத்துகின்றோம். எமது சமூகம் பலமடைகின்றது. அன்பு காட்டும் சிறிய செயற்பாடுகள் அந்த பிணைப்பை மேலும் அதிகப்படுத்துகின்றது.

இதர பிள்ளைகளுடன் உணவைப் பகிர்ந்துகொள்தல், அல்லது ஒரு புன்சிரிப்பு அல்லது அவர்களின் சுவரொட்டியைப் பார்த்து பாராட்டுதல் என்று அச்செயற்பாடுகள் அமையக் கூடும்.

நாங்கள் பல்வேறு வழிகளில் அன்பை வெளிப்படுத்த முடியும்.

- எவருக்காவது தவறு நடப்பதனை நாம் பார்த்தால், அன்பு காட்டுங்கள். உதவி செய்யுங்கள்.
- தங்களை வேதனைப்படுத்தும் விடயங்கள் பற்றி பேசவும், அவற்றுக்கு எதிராக போராடவும் மக்களுக்கு உதவி செய்யுங்கள். நாங்கள் அனைவரும் உள்ளடங்குகின்றோம். மதிக்கப்படுகின்றோம் என்ற உணர்வு பாதிக்கப்பட்டவர்களுக்கு ஏற்படும்.
- சிலரால் போராட்டம் செய்வது கடினம் என்பதனையும் அது அவர்களுக்கு ஆபத்தாக முடியும் என்பதனை நினைவிற்கொள்ளுங்கள். அவர்களையும் உள்ளடக்கும் வழிவகைகளை தேடிக்கண்டுபிடியுங்கள்.

நாங்கள் பிறர் மீது அன்பு காட்டாவிடின் வேறு யார் அன்பு காட்டுவார்கள்?



### பாதுகாப்பாக இருங்கள்

# எங்களைப் பாதுகாத்துக்கொள்வோம்

நீங்கள் வெளியில் போராட்டங்களில் ஈடுபடும் போது எப்படி பாதுகாப்பாக இருப்பது என்பதனை அறிந்து வைத்திருக்க வேண்டும்.

போராட்டம் நடக்கும் இடம் அதிக சனநெரிசல் மிக்கதாகவும் பரபரப்பாகவும் இருக்கும். எப்பொழுதும் வயதுவந்த ஒருவருடன் இருங்கள். கூட்டம் அதிகம் உள்ள இடங்களில் கரங்களை கோர்த்துக்கொள்ளுங்கள். நீங்கள் கூட்டத்திலிருந்து பிரிந்துசெல்ல நேரிட்டால் என்ன செய்ய வேண்டும் என்பதனை முன்னரேயே திட்டமிட்டுக் கொள்ளுங்கள். உதாரணமாக நீங்கள் கோட்டா கோ கமவில் இருக்கும் போது ஏதும் அசம்பாவிதம் நடைபெற்றால் அங்கிருக்கும் நூலகத்திற்கோ அல்லது செஞ்சிலுவைச் சங்கத்திற்கோ சென்று விடுவதாக சொல்லி வையுங்கள்.

சிலவேளைகளில், போராட்டங்கள் ஆபத்தானதாக மாறலாம். ஆபத்தான போராட்டக்களங்கள் பிள்ளைகளுக்கு உரியதல்ல.

எமது போராட்டக்காரர்கள் அமைதியான முறையில் போராடுகின்றனர். ஆனால் பொலிசாரும், இராணுவத்தினரும் அவர்கள் மீது துப்பாக்கிச் சூடு நடத்த முடியும். கண்ணீர்ப்புகை பிரயோகம் செய்ய முடியும். அவர்கள் போராட்டக்காரர்கள் மீது தாக்குதல் நடத்த முடியும். இவ்வாறு நடைபெறக் கூடும் என்று நீங்கள் நினைத்தால் அங்கிருந்து வெளியேறி விடுங்கள்.

இவ்வாறு எதிர்பாராமல் ஏதேனும் நடைபெற்றால், நீங்களும் உங்கள் வயதுவந்த உறவினர்களும் அங்கிருந்து உடனடியாக வெளியேறி விட வேண்டும். மற்றைய போராட்டக்காரர்கள் உங்களைப் பாதுகாப்பார்கள். அந்தளவுக்கு நீங்கள் எல்லோரும் எங்களுக்கு முக்கியமானவர்கள்.

நீங்கள் ஒன்லைனில் பாதுகாப்பாக இருக்க வேண்டும். உங்களது பெற்றோர்களும் உறவினர்களும் உங்கள் படங்களை சமூக ஊடகங்களில் வெளியிட விரும்பாமல் இருக்கக் கூடும். நீங்கள் அவர்களிடம் உங்களது ஏதாவது அடையாளத்தை வெளிப்படுத்தும் படம் ஒன்றை பதிவிடுமாறு கேட்டுக்கொள்ள முடியும்.

பாதுகாப்பு என்ற விடயத்தினைக் கருத்திற்கொள்ளும் போது எப்பொழுதும் வயதுவந்தவர்களின் கருத்துக்களை கேளுங்கள். எப்பொழுதும் உங்களை நீங்கள் செவிமடுங்கள். உங்களை அசௌகரியப்படுத்தும் எதனையும் செய்யாதீர்கள்.



# சென்று வருகின்றேன்!

உங்களுடன் நேரத்தை செலவிட கிடைத்தமை மிகவும் மகிழ்ச்சியானதாக இருக்கின்றது!

இப்பொழுது உங்களிடம் பல வினாக்கள் இருக்கலாம். அதற்கான பதில்களை புத்தகங்களை வாசிப்பதனூடாகவும், மற்றவர்களிடம் உரையாடுவதனூடாகவும் நீங்கள் அறிந்துகொள்ள முடியும்.

நடைபெறும் நிகழ்வுகளைப் பார்த்து நீங்கள் வேதனையடையவோ, கோபப்படவோ கூடும். அதிகாரம் உள்ள சிலரின் ஊழல் மோசடிகளினாலும், தவறான தலைமைத்துவத்தினாலும் எங்களில் பலர் மிகவும் துயரடைந்துள்ளோம். இது மிகவும் அநீதியான செயலாகும்.

இலங்கை எதிர்கொள்கின்ற நெருக்கடிகளுக்கு காரணம் நீங்களோ மற்றைய பிள்ளைகளோ அல்ல. நீங்களும் அதனால் பாதிக்கப்பட்டிருப்பது மிகவும் அநீதியாகும்.

இதனால் தான் எம்மில் பலர் மக்கள் போராட்டத்தில் ஒன்றிணைந்து நிலைமைகளை சரிப்படுத்த ஒன்று திரண்டிருக்கின்றனர். ஒரு நாடாக மாற்றங்களை ஏற்படுத்த ஒன்றிணைந்துள்ளனர்.

நீங்களும் மக்களின் போராட்டத்திற்கு ஆதரவு தர விரும்பினால் அதற்கு பல வழிமுறைகள் உள்ளன. பாதுகாப்பான, சிறப்பான, படைப்பாற்றல் மிக்க புதிய வழிமுறைகளைப் பற்றி சிந்தித்துப் பாருங்கள்.

நீங்கள் என் மீது காட்டிய அன்புக்கு நன்றி. நான் மகிழ்ச்சியாக இருக்கின்றேன். என்னை தயவு செய்து மற்றொரு பிள்ளையிடம் வழங்குங்கள். அப்பொழுது அவர்களும் என்னுடன் நண்பராவார்கள். உங்களுக்கு விருப்பம் எனில் உங்கள் பெற்றோர்களின் அல்லது உறவினர்களின் உதவியுடன் இந்த புத்தகத்தின் பிரதிகளை எடுத்து மற்றவர்களுக்கு பகர்ந்துகொடுக்க முடியும்.

இறுதியாக ஒரு விடயத்தை கூற அனுமதி தாருங்கள். எமது நாட்டுக்கு தீங்கு செய்த அதிகாரம் மிக்கவர்கள் பற்றி பல விடயங்கள் பற்றி பேசினோம். மக்கள் ஒன்றிணையும் போது, அவர்களை விட நாம் பலமடைகின்றோம். இதனால் தான் எமது மக்கள் போராட்டம் மிகவும் முக்கியம் பெறுகின்றது.

நாம் ஒன்றிணைந்து எமது நாட்டை பாதுகாப்பானதும், நீதியானதும், மகிழ்ச்சியானதும் அனைவருக்கும் சமமானதுமான ஓர் நாடாக மாற்ற முடியும்.

நாம் ஒன்றிணைந்து, நிச்சயம் அதனை செய்வோம்!





# படங்களுக்கான மூலங்களும் நன்றிகளும்

புத்தகத்தில் பயன்படுத்தப்பட்ட ஆனால் இங்கு பட்டியலிடப்படாத படங்கள் வடிவமைப்பாளரின் காப்பகங்களிலிருந்து எடுக்கப்பட்டவை.

**Arm**
Kitāb-I ‘ajā’ib-I Makhlūqāt. Iṣfahān, 1921. Princeton University Library. No known restrictions. https://publicdomainreview.org/collection/persian-demons-from-a-book-of-magic-and-astrology-1921

**Backgrounds**
Pechuël-Loesche, Eduard: Kießling, Johannes: Untersuchungen über Dämmerungserscheinungen: zur Erklärung der nach dem Krakatau-Ausbruch beobachteten atmosphärisch-optischen Störung. Hamburg und Leipzig: Verlag von Leopold Voss, 1888. ETH-Bibliothek Zürich, Rar 29145, https://www.e-rara.ch/zut/doi/10.3931/e-rara-56381 / Public Domain Mark.

**Barrel: blue**
https://search.openverse.engineering/image/79b2d14a-398c-470c-a060-23247af8a5d3
"A crime scene" by Markus Spiske is marked with CC0 1.0.

**Barricades**
https://www.flickr.com/photos/vikalpasl/11834870393/
Vikalpa | Groundviews | Maatram | CPA. Attribution 2.0 Generic (CC BY 2.0).

**Black trousers**
https://publicdomainreview.org/collection/hand-coloured-photographs-of-19th-century-japan
PD Worldwide.

**Brain cells**
https://wellcomecollection.org/works/u2mrc7w5/images?id=v5g4a247
Licence: Attribution 4.0 International (CC BY 4.0) Credit: Neuronal migration is an artwork depicting many very young neurons that have been produced in the neuroepithelium migrating to their appropriate destinations in the brain. This image highlights the future of neuroscience showing different classes of cells colour coded. There is no available technique to do this now, but it is not far off considering the advances that have been made with brainbow mice. The brainbow technique allows for different cell types to be tagged with fluorescent proteins to track their development and connections with other cells. Prof. Bill Harris.

**Broom**
https://commons.wikimedia.org/wiki/File:Broomstick.jpg
சஞ்சீவி சிவகுமார், CC BY-SA 4.0 <https://creativecommons.org/licenses/by-sa/4.0>, via Wikimedia Commons.

**Buddhism: Dharmachakraya**
https://www.cbsl.gov.lk/en/notes-coins/notes-and-coins/commemorative-coins-and-notes

**Cloud poison**
https://search.openverse.engineering/image/4d88f99f-7075-4319-818e-2655ee2d41e5
"Toxic Cloud" by pasukaru76 is marked with CC0 1.0.

**Compass**
https://digitalcollections.nypl.org/items/510d-47da-d088-a3d9-e040-e00a18064a99
NYPL catalog ID (B-number): b15262620 Universal Unique Identifier (UUID): e06fecb0-c53c-012f-a0a4-58d385a7bc34. The copyright and related rights status of this item has been reviewed by The New York Public Library, but we were unable to make a conclusive determination as to the copyright status of the item. You are free to use this Item in any way that is permitted by the copyright and related rights legislation that applies to your use.

**COVID-19**
https://www.cdc.gov/media/subtopic/images.htm
Alissa Eckert, MSMI, Dan Higgins, MAMS. This image is in the public domain and thus free of any copyright restrictions.

**Cricket bat**
https://commons.wikimedia.org/wiki/File:CricketBat_MetreStick.jpg
Martinvl, CC BY-SA 4.0 <https://creativecommons.org/licenses/by-sa/4.0>, via Wikimedia Commons.

**Cross**
https://en.wikipedia.org/wiki/File:-Golden_Christian_Cross.svg
Skriplerio, CC0, via Wikimedia Commons.

**Crow body (purple shirt)**
https://wellcomecollection.org/works/vexvy3g3
Credit: A physician wearing a 17th century plague preventive. Wellcome Collection. Public Domain Mark.

**Crow photo**
https://search.openverse.engineering/image/74e70a7a-a42c-44b0-b908-3d4f8c9b1b06
"Torresian Crow" by magdalena_b is marked with CC0 1.0. https://creativecommons.org/publicdomain/zero/1.0/?ref=openverse.

**Doctor’s coat**
Cropped from: https://wellcomecollection.org/works/u32rn9an/images?id=q44d9eue
Credit: A doctor bandaging a man's arm. Colour lithograph after Surow, 1929. Wellcome Collection. In copyright.

**Engine**
https://commons.wikimedia.org/wiki/File:Blumfield_V-twin_motorcycle_engine.jpg
Rankin Kennedy C.E., Public domain, via Wikimedia Commons.

**Film projector**
https://commons.wikimedia.org/wiki/File:8mm-projector_hg.jpg
Hannes Grobe 20:34, 5 May 2012 (UTC), CC BY 3.0 <https://creativecommons.org/licenses/by/3.0>, via Wikimedia Commons

**Fire**
https://publicdomainreview.org/collection/elements-and-temperaments-maerten-de-vos
PD Worldwide.

**Galle Face Green**
https://digitalcollections.nypl.org/items/c2624937-b3e1-2318-e040-e00a18067b59
From The New York Public Library.

**Gas cylinder**
https://commons.wikimedia.org/wiki/File:Naturalgastank.jpg
Annoyclime, CC BY-SA 3.0 <https://creativecommons.org/licenses/by-sa/3.0>, via Wikimedia Commons.

**Gold bars**
https://search.openverse.engineering/image/38ff2ee9-1d42-41b6-b032-2d146cc8feb1
"File:Gold bullion bars.jpg" by Stevebidmead is marked with CC0 1.0.

**Graduation: hat**
https://search.openverse.engineering/image/240c597a-b1cf-4db6-82df-e0086a668d03
"File:Graduation-1449488 1920.jpg" by Wokandapix is marked with CC0 1.0.

**Grey roof house**
https://www.flickr.com/photos/vikalpasl/albums/with/72157658201060324.
Vikalpa | Groundviews | Maatram | CPA. Attribution 2.0 Generic (CC BY 2.0).

**Haekel**
https://publicdomainreview.org/essay/human-forms-in-nature-ernst-haeckel-s-trip-to-south-asia-and-its-aftermath
This file has been identified as being free of known restrictions under copyright law, including all related and neighboring rights. https://creativecommons.org/publicdomain/mark/1.0/deed.en

**Hose**
https://search.openverse.engineering/image/ff5cb629-055b-47c0-a1b9-4e211b7b4719
"Candy Hoses" by cogdogblog is marked with CC0 1.0.

**Hospital bed**
https://search.openverse.engineering/image/1acfb029-ab32-4692-85be-ef192785c395
"File:Hospital Bed 2011.JPG" by Blogotron is marked with CC0 1.0.

**Humanism**
https://en.wikipedia.org/wiki/Happy_Human#/media/File:Happyman.svg
This file is licensed under the Creative Commons Attribution-Share Alike 3.0 Unported license.

**Independence Square**
https://commons.wikimedia.org/wiki/File:Independence_sq_CMB_2014.jpeg. Nigel Swales from Birmingham, UK, CC BY-SA 2.0 <https://creativecommons.org/licenses/by-sa/2.0>, via Wikimedia Commons.

**Inflatable toy**
https://commons.wikimedia.org/wiki/File:Inflatable_animal_air_chair-2-xavier_cottage-yercaud-salem-India.jpg. This file is licensed under the Creative Commons Attribution-Share Alike 4.0 International license.

**Islam: crescent and star**
https://commons.wikimedia.org/wiki/File:Star_and_Crescent.svg
Kbolino at en.wikipedia.org, Public domain, via Wikimedia Commons.

**Leaf with white flower**
https://www.flickr.com/photos/biodivlibrary/6430631879/
Credit - Image courtesy of BHL. Source - http://biodiversitylibrary.org. Copyright Notice - Public Domain.

**Legs**
https://wellcomecollection.org/works/ykajndh9/images?id=bwav264j
Licence: Public Domain Mark Credit: A man carrying a wooden pole (yoke) with pots suspended on either ends. Gouache painting by an Indian artist. Wellcome Collection.



**Lightbulb**
https://commons.wikimedia.org/wiki/File:Compact_fluorescent_lamp.jpg
Levente Fulop from Brno, Czech Republic, CC BY 2.0 <https://creativecommons.org/licenses/by/2.0>, via Wikimedia Commons.

**Lotus**
https://www.flickr.com/photos/biodivlibrary/50037182371/
Rights - Public Domain. Credit - Image courtesy of BHL.

**Mango**
https://search.openverse.engineering/image/c5350b6a-3267-4612-bce2-c1ba1a9b66aa
"Mangoes (Mangifera Indica) (1908) by Amanda Almira Newton. Original from U.S. Department of Agriculture Pomological Watercolor Collection. Rare and Special Collections, National Agricultural Library. Digitally enhanced.

**Megaphone**
https://www.publicdomainpictures.net/en/view-image.php?image=177725&picture=megaphone
License: CC0 Public Domain. George Hodan.

**Microphone**
https://search.openverse.engineering/image/389b1281-ff84-4e18-a74d-f8852a5a9566
"2006_08_20_PNE 015" by Dennis S. Hurd is marked with CC0 1.0.

**Paintbrush**
https://commons.wikimedia.org/wiki/File:Roze_kwast.JPG
Gvstellingwerf, CC BY-SA 3.0 <https://creativecommons.org/licenses/by-sa/3.0>, via Wikimedia Commons.

**Petrol can: blue**
https://www.pngwing.com/en/free-png-ylllw
Non-commercial use.

**Petrol can: yellow**
https://www.pngwing.com/en/free-png-zhpap
Non-commercial use.

**Phone camera**
https://search.openverse.engineering/image/af898862-2af6-4f39-a063-dd306b3843c8
"iphone camera in chinese selfie stick-france2015-em10=70-300mm-20150717-P7170400.jpg" by roland is marked with CC0 1.0.

**Pile of books**
https://search.openverse.engineering/image/3ec465fb-9bc7-4466-9d17-c2413298f39d
"Spring daffodils and books" by freestocks.org is marked with CC0 1.0.

**Pineapple**
https://www.flickr.com/photos/biodivlibrary/50803868051/
Rights - Public Domain. Credit - Image courtesy of BHL.

**Pink house**
https://www.flickr.com/photos/vikalpasl/15090843419/in/album-72157647339336378/
Vikalpa | Groundviews | Maatram | CPA. Attribution 2.0 Generic (CC BY 2.0).

**Pipes**
https://search.openverse.engineering/image/38c0fe0b-d269-4f8d-8be0-b404fbc8e9ab
"The Fairy Tale of the Three Pipes" by cogdogblog is marked with CC0 1.0.

**Plastic bucket: blue**
https://commons.wikimedia.org/wiki/File:%E6%BF%80%E5%AE%89%E3%82%B3%E3%83%BC%E3%83%8A%E3%83%BC_(2878033473).jpg
nakimusi, CC BY 2.0 <https://creativecommons.org/licenses/by/2.0>, via Wikimedia Commons.

**Plate**
https://search.openverse.engineering/image/ad1aef23-06e9-4487-b1be-bff06fcf1492
"Saucer with the arms of the Certon family, anonymous, c. 1768 - c. 1770" by anonymous is marked with CC0 1.0.

**Prosthetic arm**
https://wellcomecollection.org/works/jehkzmhx/images?id=gvb6zcc2
Licence: Attribution 4.0 International (CC BY 4.0) Credit: Artificial left arm and hand. Science Museum, London.

**Sarong fabric**
https://search.openverse.engineering/image/93038029-f0a5-42ee-a575-dde02b1fd6ad
"Panel" is marked with CC0 1.0.

**Sewing machine**
https://commons.wikimedia.org/wiki/File:Nma.img-ci20082088-608-ei-vs1.jpg
National Museum of Australia, CC BY 3.0 AU <https://creativecommons.org/licenses/by/3.0/au/deed.en>, via Wikimedia Commons.

**Singapore: One Raffles Place**
https://commons.wikimedia.org/wiki/File:Singapore_skyline.JPG
Terence Ong, CC BY-SA 3.0 <http://creativecommons.org/licenses/by-sa/3.0/>, via Wikimedia Commons.

**SL coast with trees**
https://digitalcollections.nypl.org/items/c263504a-1973-b3d1-e040-e00a18061791
Universal Unique Identifier (UUID): d113a720-c5d2-012f-46b1-58d385a7bc34. The copyright and related rights status of this item has been reviewed by The New York Public Library, but we were unable to make a conclusive determination as to the copyright status of the item. You are free to use this Item in any way that is permitted by the copyright and related rights legislation that applies to your use.

**SL map** (not the weird, sideways one)
https://upload.wikimedia.org/wikipedia/commons/5/57/Sri_Lankan_Provinces_and_districts.PNG

**SL map** (the weird, sideways one)
Deshan made this with the invaluable help of Dr. Andrew Kittle.

**Solar panels**
https://commons.wikimedia.org/wiki/File:Photovoltaic_arrays_at_the_Israeli_National_Solar_Energy_Center.jpg
David Shankbone, CC BY 3.0 <https://creativecommons.org/licenses/by/3.0>, via Wikimedia Commons.

**Tambourine**
https://commons.wikimedia.org/wiki/File:BayouSS07YellowtribeTwogirlsTambourine.jpg
Infrogmation, New Orleans, CC BY 2.5 <https://creativecommons.org/licenses/by/2.5>, via Wikimedia Commons.

**Tamil Om: Hinduism**
https://commons.wikimedia.org/wiki/File:Om-tamil.png
Anton 17, CC BY-SA 3.0 <https://creativecommons.org/licenses/by-sa/3.0>, via Wikimedia Commons.

**Tank**
https://digitalcollections.nypl.org/items/510d-47da-d60e-a3d9-e040-e00a18064a99
The copyright and related rights status of this item has been reviewed by The New York Public Library, but we were unable to make a conclusive determination as to the copyright status of the item. You are free to use this Item in any way that is permitted by the copyright and related rights legislation that applies to your use.

**Tardis**
https://search.openverse.engineering/image/ce6732b5-cfcb-4cb0-8e23-d610b98997fd
"The TARDIS from Doctor Who, at Raglan Castle" by ThatRobClarke is licensed under CC BY 2.0.

**Toys**
https://commons.wikimedia.org/wiki/File:Toy_Stall_-_Durga_Puja_Festival_-_Park_Circus_Beniapukur_-_Kolkata_2014-10-02_8842.JPG
Biswarup Ganguly, CC BY 3.0 <https://creativecommons.org/licenses/by/3.0>, via Wikimedia Commons.

**Trishaw**
https://commons.wikimedia.org/wiki/File:Bajaj_RE_4S_CNG_-_Three-wheeler_-_New_Delhi_2014-05-06_0889.JPG
Biswarup Ganguly, CC BY 3.0 <https://creativecommons.org/licenses/by/3.0>, via Wikimedia Commons.

**Video camera**
https://search.openverse.engineering/image/9a3d0f98-a021-40ad-beac-2bcbdb2275ff
"Video Camera Photo" by Jakob Owens is marked with CC0 1.0.

**White-throated kingfisher** (this is the image Linnaeus used to classify the species!)
https://www.flickr.com/photos/biodivlibrary/9492986339/
Credit - Image courtesy of BHL. Rights - Public Domain.

**White-throated kingfisher skull**
Cropped from: https://skullsite.com/skullpage/halcyon-smyrnensis-white-throated-kingfisher/

**Wig**
https://en.wikipedia.org/wiki/File:Scottish_Court_wigs_(2013).JPG
Kim Traynor. This file is licensed under the Creative Commons Attribution-Share Alike 3.0 Unported license.

**Yellow house**
https://www.flickr.com/photos/vikalpasl/22576131876/in/dateposted/
Vikalpa | Groundviews | Maatram | CPA. Attribution 2.0 Generic (CC BY 2.0).

# நன்றி

மாமா,

எப்படி? நல்லது. கதைத்தது போதும்.
32 பக்கங்கள் கொண்ட சிறுவர்
நூலுக்கு உடனடி உதவி ஆசிரியராக
இருக்க விருப்பமா? போராட்டம் பற்றி
சிறுவர்களுடன் பேச விரும்புகின்றேன்.
இதனை மிக விரைவாக செய்து முடிக்க
வேண்டும். நான் படங்களை முடிக்கின்றேன்.
இது வித்தியாசமாக இருக்கும்...

தேஷான்


ஏப்ரல் 18ம் திகதி கிடைத்த இந்த மின்னஞ்சலின் பின்னர், நாங்கள் இந்த நூலுக்காக இணைந்து பணியாற்ற தொடங்கினோம். ஏழு வாரங்களுக்கு பின்னர் நாங்கள் மிகவும் களைத்துப்போனோம், ஆனால் இந்த நூலை உங்களுடன் பகிர்ந்துகொள்வதில் மிகவும் மகிழ்ச்சியடைகின்றோம். நீங்கள் பார்த்த இந்த நூல், தேஷானின் 32 பக்க ஆரம்ப கட்ட வேலையாகும். இந்த கடினமான யோசனையை நடைமுறைப்படுத்த ஒத்துழைப்பு அளித்தவர்கள், பங்களிப்பு செய்தவர்கள், ஆலோசனைகள் வழங்கிய பலர் பற்றி உங்களுக்கு தெரியாது.

நாங்கள் இங்கு குறிப்பாக இவர்களுக்கு நன்றி கூற கடமைப்பட்டுள்ளோம்:

இந்த நூலை வாசித்து மதிப்பிட்டதற்காகவும், சிறந்த ஆலோசனைகளை வழங்கியதற்காகவும் அம்பிகா சற்குணநாதன், ஹெலனி கல்பாயா, பியுமி சமரவீர, சகுந்தலா கதிர்காமர், ஷமாரா வெத்திமுனி, ஷெஹான் கருணாதிலக மற்றும் டிரேசி ஹொல்சிங்கர் ஆகியோர்.

நூலை தொகுத்து வழங்கியமைக்காக ருவந்தி டி சிகேரா.

மொழிப்பெயர்ப்புக்கும், அச்சுப்பதிப்புக்கும், பரப்புரைக்கும் தாராளமாக நிதி உதவி அளித்த நீலன் திருச்செல்வம் டிரஸ்ட்.

எமது சிறப்பான மொழிப்பெயர்ப்பு குழுக்கள்- கிங் ரட்ணம், பிரியதர்ஷினி சிவராஜா மற்றும் சத்தியப்பிரியா ரட்ணசாமி, நிரோஜினி ரொபர்ட் ஆகியோர் தமிழ் மொழிப்பெயர்ப்புக்கும், கல்பனா புரசிங்க, ஜினந்தனி பரமேஸ்வரம் மற்றும் ஹிமன்சி தெஹிகம ஆகியோர் சிங்கள மொழிப்பெயர்ப்புக்கும்.

சட்ட மற்றும் சமூக நிதியத்தின் சக ஊழியர்கள் குறிப்பாக, சகுந்தலா கதிர்காமர் மற்றும் ஹசாரா பெர்ணான்டோ ஆகியோர் நிதி மற்றும் நிர்வாக ரீதியில் அளித்த பங்களிப்பு. உங்களின் பங்களிப்பு இன்றி இந்த நூல் பொருத்தமான வாசகர்களை சென்றடைந்திருக்காது.

ஸ்டேஜஸ் தியேட்டர் குழுவின் நண்பர்கள். குறிப்பாக ருவந்தி டி சிகேரா, பியூமி விஜேசுந்தர, வீனாதரி லக்ஷிக்கா, சஷ்னா சுஹைல் மற்றும் மஹேஷ் லக்மால் ஆகியோருக்கு நூலை அறிமுகப்படுத்துவதற்காகவும், நாடு முழுவதும் உள்ள சிறுவர்களுக்காக செயலமர்வுகளை நடத்துவதற்காகவும்

தனித்துவமான படைப்புகளுக்கும், துணிவான செயற்பாடுகளுக்காகவும் ஏப்ரல் 2022 கொழும்பு போராட்டக் கலைஞர்கள் (இராட்சத காகத்தை உருவாக்கியதற்காக)

கோட்டா கோ கம நூலகத்திலும் கல்லூரியிலும், நாடளாவிய ரீதியில் கோட்டா கோ கம மற்றும் இதர இடங்களிலும் இணைய நேரலைகளிலும் நடைபெற்ற கலந்துரையாடல்களில் கருத்துக்களையும் அறிவினையும் பகிர்ந்துகொண்ட உங்கள் அனைவருக்கும்.

டுவிட்டரில் 24.05.22 அன்று நடைபெற்ற தேஷானின் மத அடையாளங்கள் பற்றிய கலந்துரையாடல். இங்கு பெறப்பட்ட கருத்துக்கள் மகத்தானது.

நூலின் படங்கள், தொகுப்பு, மொழிபெயர்ப்பு பற்றிய பின்னூட்டங்களை வழங்கி உதவிய அன்ரூ ஹவ்சன், கெனோலி ரணதுங்க, கிங் ரட்ணம், கித்மி ரணதுங்க, லாரா வான் வாஸ், நிரன் அன்கெட்டல் மற்றும் சொஹாணி தென்னகோன். நீங்கள் அனைவரும் இந்நூலில் உள்ள தவறுகளை மிகச் சரியாக சுட்டிக்காட்டி மகத்தான உதவியை செய்திருக்கின்றீர்கள்.

இணைய காப்பகம், ஸ்டேஜஸ் தியேட்டர் குரூப் மற்றும் மைண்ட் அட்வென்ட்ச்சர்ஸ் தியேட்டர் ஆகியோர் இணையத்தில் நூல் பற்றிய தொகுப்புரைகளை வழங்கியதற்காக.

எமது குடும்பங்களின் அன்புக்கும், எமது பங்காளர்களான டிரேசி, பியூமி ஆகியோருக்கும், கடினமான எமது இந்த பணிக்கு அன்புடன் நல்லாதரவு அளித்தமைக்காகவும் எமது பிள்ளைகளான நேஹா மற்றும் காவன்: கமில் மற்றும் அயானா ஆகியோருக்கு எமது உபதேசங்களில் பொறுமை காத்தமைக்காகவும்.

உங்களது வாழ்க்கை மாங்கனியைப் போன்று இனிமையானதாக மாறட்டும். உங்களது துடைப்பங்கள் சிறப்பான பணிகளை செய்யட்டும். உங்களது போராட்டம் சக்தியையும் புத்தியையும் கொண்டதாக அமையட்டும்.




## படைப்பாளிகளைப் பற்றி


தேஷான் தென்னகோன் சிறந்ததொரு கெமரா கலைஞர் என்றும் மிகவும் திறமைசாலி என்றும் இந்த நூலை எழுதிய அமால் விபரிக்கின்றார். தேஷானை www.onlinedesho.com என்ற இணையத்திலும் @deshan10 என்ற டுவிட்டர் முகவரியிலும் தொடர்பு கொள்ள முடியும்.

தேஷான், இந்த நூலை வடிவமைத்து அதற்கான விளக்கப்படங்களை வரைந்து சிறப்பான பணியை ஆற்றியுள்ளார். தேஷான் பற்றி அமால் எழுதிய நல்ல விடயங்களை மிகவும் தன்னடக்கத்துடன் தேஷான் அகற்றிவிட்டார். அமால் டி சிகேராவை www.institutesi.org/about-us என்ற இணையத்திலும் @Amal_deC என்ற டுவிட்டர் முகவரியிலும் தொடர்பு கொள்ள முடியும்.

இந்த அற்புதமான நூல் சிக்கலானதும் முக்கியத்தும் வாய்ந்ததுமான விவகாரத்தை சிறுவர்களுக்கு ஏற்றவாறு மிகவும் சிறந்த முறையில் அணுகக் கூடிய விதத்தில் வடிவமைக்கப்பட்டுள்ளது.

— ஷமாரா வெத்திமுனி
வரலாற்று அறிஞர்

# வணக்கம்!

உங்களைப் போன்ற சிறுவர்களுக்கான நூலாக நான் இருக்கின்றேன். இலங்கையில் என்ன நடைபெறுகின்றது என்பது பற்றிப் பேசுவோம். மக்களின் போராட்டம் பற்றியும் அதில் நீங்கள் எவ்வாறு பாதுகாப்பாக இணைந்துகொள்ளலாம் என்பது பற்றியும் பேசுவோம். இலங்கையின் கடந்த காலத்தைப் பற்றியும், நாங்கள் ஒவ்வொருவரையும் எவ்வாறு நடத்தினோம் என்பது பற்றியும் பேசுவோம். அத்துடன் எங்களது கடந்த காலத்தைப் பற்றியும் பேசுவோம். நாங்கள் எவ்வாறு உத்வேகமான பிரஜைகளாகலாம் என்றும், நேர்மையானதும் பாதுகாப்பானதும் அழகு மிகுந்ததுமான எமக்கான ஒரு நாட்டை எவ்வாறு உருவாக்குவது என்பது பற்றியும் பேசுவோம்.

பல முக்கியத்துவம் வாய்ந்த யோசனைகள் உள்ளடங்கிய ‘கப்புட்டு’ நூல் மிகவும் சக்தவாய்ந்தது. இலங்கை எப்போதாவது ஒரு வலுவான படைப்பாற்றல் மிக்க மற்றும் செழிப்பான தேசமாக மாற வேண்டுமானால், இது போன்ற யோசனைகள் மிகவும் அவசியமானவை.

— ஷெஹான் கருணாதிலக்க
ஆசிரியர் “சைனாமேன்: த லெஜண்ட் ஒவ் பிரதீப் மெத்தியூ”

சிறப்பான படைப்பு! நகைச்சுவையையும், விரக்தியையும் கிண்டலையும் படங்களில் காண முடிகின்றது. மிகவும் சிறப்பான சிந்தனை. மிகவும் அழகான முறையில் வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

— அம்பிகா சற்குணநாதன்
மனித உரிமைகள் வழக்கறிஞர் மற்றும் இலங்கை மனித உரிமைகள் ஆணைக்குழுவின் முன்னாள் ஆணையாளர்

ISBN 978-1-7395849-1-7

